# ஸ்வாமி விவேகாநந்தர்

This b
below :

General 23974
1970
அ 36/5

இயற்றியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்




தபோவனப் பிரசுராலயம்

ராய்த்துறை :: திருச்சி

1950




## பொருளடக்கம்

# சுவாமி விவேகாநந்தர்

3615

## முதல் அத்தியாயம்

### தவச் செல்வன்

வங்காளத்துக்குத் தலைமை நகராகிய கல்கத்தாவில் சென்ற நூற்றாண்டிலே விஸ்வநாத தத்தர் என்ற பெரியார் ஒருவர் வசித்து வந்தார். அவர் க்ஷத்திரிய வம்சத்தில் உதித்தவர். உத்தம குணங்கள் பல அவரிடத்திருந்தன. பேரறிஞர் என்று அவரைப் பகரலாம். அவர்கற்ற கல்வியானது அவரது அறிவை மேலும் ஓங்குவித்தது. கல்கத்தா நீதிமன்றத்திலே அவர் ஒரு நியாயவாதியாக இருந்து வந்தார். ஏராளமாகச் சம்பாதித்த செல்வத்தை அவர் தாராளமாகச் செலவிட்டு வந்தார். வருங்காலத்தைப் பற்றிய எண்ணம் சிறிதேனும் அவர்க்கில்லை. வறியோர் விரும்பி யாசித்ததை இல்லையெனாது ஈதல் அவருடைய வழக்கம். பண்டிதரும் பாமரரும், செல்வர்களும் வறியர்களும் புடைசூழ சீரும் சிறப்புடன் இவர் வாழலானார்.

விஸ்வநாத தத்தருக்கு புவனேஸ்வரிமாதா என்ற அம்மையார் வாழ்க்கைத் துணைவியாக அமைந்தார். அடக்கம், அமைதி, நிறைகாப்பு முதலிய பெண்மைகள் அவருக்கு அணிகலமாயின. ஆடவர்களிடம் தென்படும் அஞ்சாமை, ஆளும்திறமை, முதலிய மாண்புகளும் இம்மாதரசியிடம் மிளிர்ந்திருந்தன. கடவுளிடத்து இவர் மாறாத பக்தி

பூண்டு ஒழுகிவந்தார். இராமாயணம், மஹாபாரதம் என்னும் இதிஹாசங்களை புவனேஸ்வரி மாதா காவியரூபமாக மனப்பாடம் பண்ணியிருந்தார். புதல்விமார் இருவரை இவர் ஈன்றெடுத்து அன்புடன் அவர்களை ஆதரித்து வந்தார். பின்பு ஆண்மகவு ஒன்று இவருக்கு வாய்க்கவில்லை என்ற எண்ணம் மனதை வாட்டிவந்தது. மக்கட்பேற்றிலும் ஆண்மகவையன்றோ இல்லறத்தார் பெரிதும் விரும்புகின்றனர்! சற்புத்திரன் ஒருவன் வேண்டுமென்று தாம் வணங்கிய கடவுளாகிய காசி விஸ்வநாதரிடம் அவர் பிரார்த்தித்து வந்தார். வீட்டுக் காரியங்களைக் கவனிக்கும்போதும் உண்ணும்போதும் உறங்கப்போம்போதும் இந்த ஓர் எண்ணமே இடையருது அவரது உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. நள்ளிரவிலே அவர் எழுந்திருந்து பிள்ளைவரம் வேண்டிக் கண்ணீரும் கம்பலையுமாய்க் கடவுளை வழுத்துவார்.

இறைவன் அருளினுல் புவனேஸ்வரிமாதா கர்ப்பவதியானுர். சர்வகாலமும் சிவனேயே சிந்தித்து வந்தமையால் அவ்வம்மையார் உள்ளம் பெருங்கோயிலாக மாறிவிட்டது. கி. பி. 1863-ம் ஆண்டிலே ஜனவரி மாதம் 12-ம் நாளன்று, தைத்திங்கள் முதல் நாளாகிய சங்கராந்தியன்று இவ்வம்மையாருக்கு ஆண்மகவு ஒன்று பிறந்தது. அக்குழந்தைதான் எதிர்காலத்தில் உலகம் முழுதுக்குமே பரமாசாரியராக வரப்போகிறது என்பதைத் தாய் தந்தையரும் அறிந்திலர்; வேறுயாரும் அறிந்திலர்.

புதிதாகப் பிறந்திருந்த பிள்ளையின் வடிவத்தைப் பார்க்கப் பார்க்க வீட்டார் அனைவருக்கும் பெருவியப்பு

உண்டாயிற்று. நெடுநாளைக்கு முன்பு உலக இன்பங்களை நீத்துத்துறவறம்பூண்டு வெளியேகின பாட்டனர் துர்க்கா சரண தத்தரது திருமேனியை அக்குழந்தையின் அமைப்பு முற்றிலும் ஒத்திருந்தது. ஒருவேளை அப்பெரியாரே திரும்பவும் ஒருமுறை இக்குழந்தையாகப் பிறந்திருக்கக் கூடுமோ என்று உற்ருர் உறவினர் அதிசயித்தார்கள். குழந்தைக்கு என்ன பெயரிட்டு அழைப்பது என்பதைப் பற்றி பெரியோர்கள் பலவிதமாக எண்ணினுர்கள். பாட்டனுரின் பெயரையே வைத்துவிடலாமா, அல்லது சிவபெருமானின் திருநாமங்களில் ஒன்ருகிய வீரேஸ்வரன் என்ற பெயரை வைக்கலாமா என்றெல்லாம் சிந்தித்துக்கொண்டிருந்தார்கள். முடிவில் இம்மகவு பிறந்த நாளையும் நட்சத்திரத்தையும் ஒட்டி நரேந்திரநாதன் என்ற நாமகரணம் சூட்டினுர்கள்.

இச்சிறுவனுக்கு வயது மூன்று ஆவதற்கு முன்பே அவன் செய்த சேஷ்டை எண்ணிக்கையில் அடங்கா. திரும்பத் திரும்ப அவனைக்குறித்து வீட்டில் கவலைகள் பல வந்துவிடும். பெற்ருேர்கள் அவனை எவ்வளவுக்கெவ்வளவு மிரட்டினுர்களோ அவ்வளவுக்கவ்வளவு அவனது துடுக்கும் துணிவும் அதிகரித்தன. தண்டனையை அவன் சிறிதும் பொருட்படுத்தான். துஷ்டத்தனம் நிறைந்த நரேந்திரனை வசப்படுத்துதற்கு ஒரே ஒரு வழிதான் இருந்தது. எப்பொழுதெல்லாம் அவனிடம் மூர்க்கத்தனம் தென்பட்டதோ அப்போதெல்லாம் அன்னை அவனை நீர்க்குழாய்க் கடியில் நிறுத்திவிட்டுத் தண்ணீர் அவன் தலைமீது ஓயாது விழ்ந்து கொண்டிருக்கும்படி செய்துவிடுவார். பொழியும்

புனலின் கீழ்மட்டும் அவன் நெடுநேரம் சாந்தமாக சும்மா விருப்பான். சிறுவனது மூர்க்கத்தனத்தையும் பிடிவாதத்தையும் பார்க்கச் சகியாத தாய், "பிள்ளைவரம்வேண்டி சிவபிரானிடம் தவமிருந்த எனக்கு அவன் தன்பூதகணங்களில் ஒன்றை அனுப்பியிருக்கிறான்; என்செய்வேன்?" என்று தமது சஞ்சலத்தை வெளியிடுவார்.

---

## இரண்டாம் அத்தியாயம்

## விளையாட்டில் வாழ்வின் விளக்கம்

பெரியோர்கள் பெறும் பெருமையில் பெரும்பகுதி அவர்களுடைய அன்னையார்களிடமிருந்து வருகின்றன. அக்கோட்பாட்டின்படி புவனேஸ்வரிமாதா புகட்டியகல்வியும் அதை நரேந்திரன் கிரகித்தவகையுமே அவன் அடைந்த மேன்மைக்கு முக்கிய காரணமாகும். பிள்ளையை மடியில் அமர்த்திக்கொண்டு இராமாயணக் கதையை தாய் எடுத்துச் சொல்லுவார். இராமனது ஆண்மையையும், சீதையின் தூய்மையையும் தெளிவுபட அவர் வருணித்தார். பிள்ளையின் உள்ளத்தை அவ்வருணிப்பு அடியோடு கவர்ந்தது. இதன் பயனாகவே நரேந்திரன் சீதாராமனைத் தனது வழிபடு தெய்வமாக வழுத்திவந்தான். இராமபக்தியிலே நரேந்திரனுக்கு ஒப்பானவர் யாருமில்லை என்றால் அந்த பக்தியைக் குழந்தைப் பருவத்திலேயே அவனுக்கு ஊட்டியவர் அவனை ஈன்றெடுத்த அன்னையாரேயாவர்.

சீதாராமனது விக்ரஹம் ஒன்றை வைத்துக்கொண்டு அதன்மூலம் நரேந்திரன் கடவுளை வழிபடத் தொடங்கினன். அதை அலங்கரித்து வைத்துக்கொண்டு அதனெதிரே அமர்ந்திருந்து அவன் நெடுநேரம் தியானம் பண்ணுவான். அப்படிச்செய்வது அவனுக்கு விருப்பமான விளையாட்டு ஆகும். ஒரு நாள் ஒரு கூட்டாளியுடன் மாடியில் ஓர்அறையில் அத்தகைய வழிபாடு நெடுநேரம் செய்து வந்தான். அறையைத் தாளிட்டுக்கொண்டு இருவரும் தியானத்தில் உட்கார்ந்துவிட்டார்கள். எங்குத் தேடியும் பிள்ளைகளைக் காணுமையால் இரு வீட்டார்க்கும் கவலைமிக உண்டாயிற்று. கடைசியாக மாடியில் தேடவந்தார்கள். கதவோ அடைபட்டிருந்தது. கூச்சலிட்டு அழைத்தும் உள்ளிருந்து மறுமொழியொன்றும் வரவில்லை. திகைத்துப் போன பெற்றோர்கள் கதவை பலவந்தமாக உதைத்துத் தள்ளினர்கள். அந்த ஆரவாரத்தைக்கேட்டு அரண்டு போன கூட்டாளி ஓட்டம் பிடித்துவிட்டான். ஆனல் இந்த இரைச்சல் ஒன்றும் நரேந்திரன் காதில்மட்டும் விழவில்லை. புறஉலக உணர்ச்சியற்று அவன் ஆழ்ந்து நிஷ்டையிலே அமர்ந்திருந்தது பார்த்தோருக்கு பெருவியப்பூட்டியது.

தங்கள் வீட்டு வண்டிக்காரனிடம் நரேந்திரனுக்கு அத்தியந்த விருப்பம். அவன் வண்டிக்காரனிடம் அடிக்கடி ஓடிவிடுவான். வண்டியோட்டுகிறவனுக்கு நிகரானவன் உலகில் யாருமில்லை என்பது இச்சிறுவனது எண்ணம். வண்டி வைத்திருப்பவனது தயவு தாக்ஷிண்யம் ஊரார் அனைவருக்கும் வேண்டும். ஆதலால் தானும் பெரி

யவனுகும்போது ஒரு வண்டிக்காரனுக வேண்டுமென்று அவன் நினைத்திருந்தான். இருவருக்குமிடையில் ஒரு நாள் விவாகத்தைப் பற்றிய பேச்சு எழுந்தது. என்ன காரணத்தாலோ விவாகம் என்பது வண்டிக்காரனுக்குச்சிறிதேனும் பிடிக்கவில்லை. அவன் அதை அறவே இழித்துப்பேசினுன். அவனுடைய பேச்சு நரேந்திரனது உள்ளத்தில் பசுமரத்தாணிபோலப் பதிந்தது. சுயநலமே வடிவெடுத்ததும் துன்பத்துக்கு ஏதுவானதுமாகிய விவாகத்தைத் தான் கனவிலும் கருதுகிறதில்லை என்று அவன் அப்பொழுதே தீர்மானித்து விட்டான்.

தூங்கும்போது உடலும் உள்ளமும் ஓய்வு பெறுகின்றன. அவ்வேளையில் அறிவானது காரிருளில் ஒடுங்கி விடுவதுதான் பொதுவாக எல்லாருடைய உறக்கத்தின் அனுபவம். ஆனுல் நரேந்திரனுடைய நித்திரை ஏனையவர்களுடையது போன்றதல்ல. அவன் தூங்கப்போனபொழுதெல்லாம் உருண்டை வடிவமான ஜோதி ஒன்று தன்னைநோக்கி நகர்ந்துவருவதைக் காண்பான். அப்பேரொளியில் கலந்து மெய்மறந்து விடுவதுதான் அவனது துயில். இந்த யோக நித்திரையானது அவனது மூன்றும் பிராயத்திலிருந்து ஆயுள் பரியந்தம் அவனிடம் நிலைத்திருந்தது.

ஐந்தாவது வயதில் நரேந்திரனுக்கு அக்ஷராப்பியாசம் செய்யப்பட்டது. அதுமுதல் அவன் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடத்துக்குப் போய்வந்தான். ஆனுல் அங்கு கெட்ட பிள்ளைகளின் சஹவாசத்தால் பகரவொண்ணுப் புன்

மொழிகள் பல பேச ஆரம்பித்தான். அதைச் செவியுற்ற பெற்றோர்கள் பொருந்தாத கூட்டத்தில் அவனைச் சேர்க்கலாகாதென்று தீர்மானித்து வீட்டிலேயே அவனுக்குப் பாடம் புகட்ட ஏற்பாடு செய்தார்கள். குறிப்பிட்ட சில பிள்ளைகளோடு அவன் சொந்த இல்லத்தில் கல்விபயின்று வந்தான். நரேந்திரனிடத்திருந்த ஞாபகசக்தி எத்தகையதென்பதை அவனுடைய ஆசிரியர் அறிந்து கொள்ளவில்லை. அவர் பாடம் புகட்டியபோதெல்லாம் கண்ணைச் சிறிது மூடிக்கொண்டு தியானத்திலிருப்பவன்போன்று அவன் ஆசிரியர் புகட்டுவதைக் கேட்டு கிரகித்துவந்தான். ஆனால் உபாத்தியாயர் இவனை மந்தனென்றும் தூங்குமூஞ்சிப் பையன் என்றும் கருதிவந்தார். அவன் வகுப்பில் தூங்கிவிட்டானென்று ஒரு நாள் ஆசிரியர் மிகவும் சினந்துகொண்டார். தான் தூங்கவில்லை என்பதை நிரூபித்தற் பொருட்டு சுமார் ஒருமணி நேரம் ஆசிரியர் சொல்லிவந்ததை யெல்லாம் நரேந்திரன் அப்படியே ஒப்பித்தான். இதுபோன்ற ஞாபகசக்தி ஒருவனிடம் இருக்க முடியுமாவென்று அந்த உபாத்தியாயர் வியப்படைந்தார். ஒரு வருஷத்துக்குள்ளாக இச்சிறுவன் சமஸ்கிருத நிகண்டு ஆகிய அமரகோசத்தை மனப்பாடம் பண்ணி விட்டான். அம்மொழியில் அவனுக்கு அளவிட முடியாத பற்றுதல் இருந்தது.

விஸ்வநாத தத்தர் வீட்டுக்கு வந்தவர்களுக்கிடையில் ஜாதி வித்தியாசம் பாராட்டி அன்னபானம் வழங்கப்பட்டது. ஆனால் நரேந்திரனுக்கோ ஜாதி என்றால் இன்ன

தென்று சிறிதும் விளங்கவில்லை. ஒரு மனிதன் மற்றொரு மனிதனோடு இருந்து ஏன் உண்ணலாகாது? அவ்வாறு சாப்பிட்டால் என்னதான் சம்பவித்துவிடும்? வீடு அடியோடு விழுந்துவிடுமா? அல்லது அவன் அக்கணமே மாண்டு போய்விடுவானோ? இவ்வாறெல்லாம் அச்சிறுவன் சிந்திக்கலானான்.

தன்னோடு விளையாடிய பிள்ளைகளுக்கிடையில் நரேந்திரன் யாண்டும் தலைமை வகித்து வந்தான். தன்னை ஒரு ராஜா என்று அவன் சொல்லிக்கொள்வான். கூட்டாளிகள் எல்லோரும் அவனது ஆக்ஞைப்படியே நடந்து கொள்வார்கள். சங்கீதம் கேட்பதில் நரேந்திரனுக்கு அத்தியந்தப் பிரியம். பண் இசையுடன் அவனும் உருக்கமாகப் பாட வல்லவனாயிருந்தான். சிலசமயங்களில் உயர்ந்த கருத்துக்கள் அடங்கிய பாடல்களைப் பாடிக்கொண்டு பிச்சைக்காரர்கள் வீதியிலே செல்லுவார்கள். அப்பாடல்களைக்கேட்பதில் நரேந்திரனுக்கு அளவில் அடங்காத விருப்பம் இருந்தது. அன்னை புவனேஸ்வரிமாதாவும் அப்பாடல்களைக் கற்க அவனுக்கு உற்சாகம் ஊட்டிவந்தார். ஆஞ்சநேயரது பராக்கிரமத்தையும் பக்திப் பிரபாவத்தையும் பாடல்கள் வாயிலாகவும் அகவல்கள் வாயிலாகவும் கேட்கும்போதெல்லாம் அவன் ஆனந்த பரவசமடைந்துவிடுவான். ஆஞ்சநேயர்போன்று தானும் ஒரு மஹாவீரனாக வேண்டும் என்று அவன் கருதிவந்தான்.

——

## மூன்ரும் அத்தியாயம்

## பள்ளிப் படிப்பு

தருணம் வந்தபோது உயர்தரப்பள்ளிக் கூடத்துக்கு நரேந்திரன் அனுப்பப்பட்டான். அங்கும் அவன் சுறுசுறுப் புள்ளவனுயிருந்தான். சிறிதுநேரமாவது நாற்காலியின் மீது அமைதியுற்று உட்கார்ந்திருக்க அவனுக்கு இயலாது. அமர்ந்திருப்பதற்கும் நிற்பதற்கும் இடைநிலையில் அவன் ஆடிக்கொண்டிருப்பான். பரபரப்பு மிகுதியால் நாள் தோறும் ஒரு சட்டை அல்லது வேஷ்டியைக் கிழித்து விடு வான். எந்த விளையாட்டானலும் அதிக ஊக்கத்துடன் விளையாடுவான். 'எதற்கும் அஞ்சாப்பிசாசு' என்று அவனை அழைப்பார்கள். ஆனல் பிள்ளைகள் சண்டையிட் டுக்கொள்வது அவனுக்குச் சிறிதும்பிடிக்காது. சிறுவர்கள் கைகலக்க ஆரம்பித்துவிட்டால் தன்மீது அடி வீழ்வதை யும் பொருட்படுத்தாது அவர்களுக்கிடையில் பாய்ந்து அவர்களைச் சமாதானப்படுத்துவான். ஆபத்துக்காலத்தில் தன் உயிரையும் வழங்கி ஒருவனை காப்பாற்றும் உதார குணம் அவனிடத்திருந்தது.

பள்ளிக்கூடத்தில் மேல்வகுப்புக்குப் போனபோது ஆங்கிலம் கற்கவேண்டிய அவசியம் நரேந்திரனுக்கு ஏற் பட்டது. ஆனல் அது வெளிநாட்டு மொழி என்று அதைக் கற்க அவன் அறவே மறுத்துவிட்டான். யார் சொல்லியும் கேட்கவில்லை. சிறிது காலத்துக்குப் பிறகு அதைக் கற்க வேண்டிய அவசியத்தை அவன் தானே உணர்ந்தான். நாடிய கருமம் எதுவாயினும் அதை அரை குறையாகச்

செய்வது அவனது வழக்கமன்று. செய்வன திருந்தச் செய் என்னும் கோட்பாடு அவனது இயற்கையில் படிந்திருந்தது. ஆதலால் இப்போது முழுமனதுடன் ஆங்கிலம் கற்க ஆரம்பித்து விட்டான். அம்மொழியில் அவன் தேர்ச்சி பெற்றது பின்னால் உலகுக்கு எவ்வளவு பயன் பட்டது என்பது சொல்லாமலே விளங்கும். சுவாமி விவேகானந்தர் உலகு அனைத்துக்கும் உவந்து அளித்த அருட்செய்தி ஆங்கிலம் வாயிலாகவல்லவோ வழங்கப் பட்டது?

நரேந்திரன் தன் தோழன் ஒருவன் வீட்டுக்கு விளையாடுவதற்கு அடிக்கடி போய்விடுவான். அங்கிருந்த சண்பகமரம் ஒன்றின் மீதேறி கால்கள் இரண்டையும் அதன் கிளைகளிலே பின்னிக்கொண்டு தலைகீழாகத் தொங்கி ஊசலாடி விளையாடுதலில் அவனுக்கு அத்தியந்த விருப்பம். ஒருநாள் வழக்கம்போல் அவன் மரத்தின்மீதேற முயன்ற போது அவ்வீட்டிலிருந்த விருத்தர் ஒருவர் வந்து அந்தச் சண்பகமரத்தின் மீது மட்டும் ஏறலாகாதென்று அவனுக்கு எச்சரிக்கை செய்தார். அதற்குக் காரணம் யாதோ வென்று நரேந்திரன் வினவினான். அம்மரத்தில் ஒரு பிரம்மராக்ஷசன் அண்டியிருந்ததாகவும், அம்மரத்தின் மீது ஏறியவர்களைக் கொல்ல அவன் துணிந்திருந்ததாகவும் அப்பெரியார் விடைவிடுத்தார். வாலிபர்கள் இருவரும் வாய்பொத்தி அவரது வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருந்தனர். ஆதலால் அக்கிழவர் இச்சிறுவர்களை மருட்டி விட்டதாக எண்ணிக்கொண்டு அப்புறம் சென்றார். சிறிது நேரத்திற்குள் நரேந்திரன் மீண்டும் மரத்தின்மீது ஏற

எத்தலித்தான். உண்மையாகவே மருண்டுபோன அவனது தோழனே பிசாசைப்பற்றி அவனுக்கு ஞாபகமூட்டி ஏற வொட்டாது தடுத்தான். ஆனால் இளம் வீரன் கொல் லென்று நகைத்து " என்ன அறிவீனம்! ஒருவர் சொல் வதை எல்லாம் யோசித்துப்பார்க்காது மெய் என்று நம்பி விடலாமா? இக்கிழவனார் கூற்று உண்மையெனின் நெடு நாளைக்கு முன்பே என்தலை தெறித்துப் போயிருக்குமே!" என்றான்.

ஒருநாள் வகுப்பில் பூகோள பாடத்தில் இவன் தப்பி தம் ஒன்று செய்து விட்டானென்று எண்ணிய உபாத்தி யாயர் இவனை மிகத்தண்டித்தார். அவர் அடித்த அடி களை எல்லாம் நரேந்திரன் சாந்தமாகப் பொறுத்துக் கொண்டு தான் இறுத்த விடையையே திரும்பத் திரும்பச் சாதித்து வந்தான். அதனால் அவரது சினம் மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போயிற்று. கடைசியாகத் தப்பிதம் தம்மிடம் இருந்ததை உபாத்தியாயர் உணர்ந் தார். மாணுக்கரிடமிருந்து அவர் மன்னிப்பும் கேட்டுக் கொண்டார். சிறு பிள்ளை யெனினும் இதுபோன்ற சந் தர்ப்பங்களில் நரேந்திரன் மனே உறுதியும் அஞ்சாத் தன்மையும் மிகப் படைத்திருந்தான். தனக்கு மெய் யென்று தோன்றியதிலிருந்து எக்காரணத்தை முன்னிட் டும் அவன் அணுவளவேனும் பிறழவே மாட்டான்.

நரேந்திரன் உயர்தரப் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்தபோது விஸ்வநாத தத்தர் குடும்பம் மத்திய மாகாணத்திலுள்ள ரெய்ப்பூருக்கு சொஞ்சகாலம் போக

வேண்டி நேர்ந்தது. வீட்டாரோடு அவனும் வெளியூருக்குப் போகவேண்டியிருந்தமையால் அவனது படிப்புக்குச் சிறிது பங்கம் ஏற்பட்டது. ஆனால் தந்தையாரிடமிருந்து பொது அறிவு சம்பந்தமான பயிற்சிகள் பல பெறுதற்கு அந்த நீண்ட இடையீடு உதவி புரிந்தது. ரெய்ப்பூரில் அவன் இரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தான். பள்ளிக்கூடத்தில் அவன் முறையாகக் கற்கவேண்டிய கல்விக்கு அது தடையாயிற்று. ஆதலால் அவன் கல்கத்தாவுக்குத் திரும்பியபோது கல்லூரிப்பிரவேசப் பரீக்ஷைக்குச் சேர்த்துக் கொள்வதற்கு ஆக்ஷேபம் மிக உண்டாயிற்று. ஆனால் அவனது பொது அறிவையும் ஆற்றலையும் முகாமையாகக் கொண்டு கல்வி இலாகா நிபந்தனைகளினின்று அவனுக்கு விலக்குச் செய்தார்கள். மூன்று வருஷங்களில் பயில வேண்டிய பாடங்களை யெல்லாம் ஒரே வருஷத்தில் அவன் கற்கவேண்டியதாயிற்று. தன்னம்பிக்கை மிகப் படைத்திருந்த இளைஞன் தன்மீது சுமத்தப்பட்டிருந்த இப்பொறுப்பைக்கண்டு மருண்டு மனம் தளரவில்லை. அல்லும் பகலும் அதிசிரத்தையுடன் படித்துப் பரீக்ஷையில் முதல் ஸ்தானம் வகித்துத் தேர்ந்ததுமல்லாமல் தனது பாடசாலைக்கே அவ்வாண்டில் அவன் தனிப்பெருமை தேடிவைத்தான்.

கல்லூரிப் படிப்பில் பிரவேசித்ததும் நரேந்திரனது மனப்பான்மை பெரிதும் மாறிவிட்டது. வேடிக்கை விநோதங்களில் காலங்கழிக்க இப்போது அவனுக்கு அவகாசமில்லை. பாட புஸ்தகங்களைத் தவிர மெய்யறிவூட்டும்

வேறு பல புஸ்தகங்களையும் அவன் படிக்கத் தொடங்கி ஞன். தாய்பாஷையாகிய வங்காளம், சமஸ்கிருதம், ஆங் கிலம், தத்துவ ஞானம், தர்க்கம், தேசசரித்திரம் முதலிய வைகளில் அவன் மேம்பாடு மிக அடைந்திருந்தான். அதை யெல்லாம் காணலுற்ற கல்லூரி ஆசிரியர்களும் மிக வியப் படைந்தார்கள். மாணுக்கனுயிருந்தபோதே அவன் படைத் திருந்த வாக்குத் திறமையை அக்காலத்துப் பேச்சாளரா கிய சுரேந்திரநாத பானர்ஜி கண்டறிந்து அவனைப் பெரி தும் புகழ்ந்து பாராட்டினர். சந்தர்ப்பத்துக்கேற்ற நகைச் சுவைபொலியும் சொற்களைச் சொரிவது நரேந்திரனது இயல்பு. கேட்போரனைவரும் விலாப்புடைக்கச்சிரிக்கும்படி அவன் செய்துவிடுவான்.

அவனது மேன்மைகளை முன்விட்டு மாணவர் கூட்ட மொன்று எப்போதும் அவனைச் சூழ்ந்து கொண்டேயிருக் கும். ஆனுல் வீண் ஆடம்பரத்தையும் சொகுசையும் நரேந் திரன் ஒருக்காலும் சகியான். அழகுக்காக உடைதரிக்கும் சளுக்கர்களை அவன் கடிந்து வெறுப்பான். சிறுமையைக் காணுமிடத்தே அதைத்தாக்குவது அவனது சீரியசுபாவம். இங்ஙனம் தலை மாணுக்கன் ஒருவனுக்கு அணிகலமாக இலங்கும் நானுவிதமான மாண்புகளை யெல்லாம் நரேந் திரன் பெற்றிருந்தான். லலித கலா ஞானங்களில் சிறந்த தொன்முகிய சங்கீதத்தில் அவன் தேர்ச்சி மிகப் பெற்றிருந் தான். கலாசாலையில் ஒரு நாள் சுமார் இருநூறு மாணவர் கள் அடங்கியிருந்த வகுப்புக்கு அதன் ஆசிரியர் வரச்சிறிது கால தாமத மாயிற்று. அப்போது நரேந்திரன் பாட்டு ஒன்றுபாடி அவர்களை மகிழ்விக்க வேண்டுமென்று மாணுக்

கர் அனைவரும் வேண்டினார்கள். அவனும் அக்கணமே இனிய கம்பீரமானகுரலிலே பாடியதை எல்லோரும் மனம் குவிந்து மௌனமுற்றுக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஆசிரியரும் பாட்டு முடியும் பரியந்தம் வெளியே நின்று கேட்டு அனுபவித்து விட்டு மலர்ந்த முகக் குறியுடன் பிர வேசித்து கானரசத்தை மிகவும் போற்றினார். ஆண்டு தோறும் பரீக்ஷைக்காலம் அணுகியபோது நரேந்திரன் தனது முழுமனதையும் பாடபுத்தகங்களில் செலுத்தினான். அது போழ்து சந்தடி யில்லாத ஓர் இல்லத்தில் அமர்ந்து கொண்டு புதியனவும் பழையனவுமான பாடங்களை அவன் செவ்வனே கற்று வந்தான். அதன் பயனாக நரேந் திரன் பரீக்ஷைகளில் சிறப்புடன் தேர்ந்து பி. ஏ. பட்ட தாரியும் ஆனான். பின்பு அவன் சட்ட கலாசாலையில் படித் துக்கொண்டிருந்தான். ஆனால் பி. எல். பட்டம் பெறுவ தற்குமுன்பே ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரால் ஆட்கொள்ளப் பட்டான்.

---

## நான்காம் அத்தியாயம்

## நலமும் கேடும் நிறைந்த உலக வாழ்வு

தங்களுடைய எதிர்கால வாழ்க்கை மகோன்னதமா யிருக்கவேண்டுமென்று மனக்கோட்டை கட்டுவது மாணாக் கர்களது இயல்பு. நரேந்திரன் அவ்விதிக்கு விலக்கானவன் அல்லன். ஆனால் அவன் செய்த மனோராஜ்யத்தில் தனி மகிமை யொன்று இருந்தது. அழியும் பாங்குடைய எதி

லும் தனது வாழ்வு வீணுகப் போய்விடலாகாது என்று அவன் எண்ணி வந்தான். "உற்று நோக்குங்கால் துறவி ஒருவனே மெய்யான வீரன்; வேந்தனையும் வெறும் துரும் பெனக்கருதுபவன்; மரணத்தை வென்று அதற்கப்பாலிருக் கும் மெய்ப்பொருளை உணர்பவன் சந்நியாசி ஒருவனே" என்ற எண்ணம் இடையிடையே அவனது உள்ளத்தில் உதிக்கும்.

வாரவிடுமுறை நாட்களில் தனது நண்பர்களின் வீட் டுக்குச்சென்று வருவது நரேந்திரனது வழக்கம். சிலவேளை களில் இரண்டொரு நாள் அங்கு அவன் தங்கிவிடுவான். அவ்விதமே ஓர் இரவு தன் வீட்டிலிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்திலிருந்த ஒரு தோழனது இல்லத்திலே அவன் தங்கி யிருந்தான். அங்குக் குழுமியிருந்த கூட்டாளி கள் சிலருடன் அவன் உல்லாசமாக காலம்கழித்திருந்தான். அப்போது எதிர்பாராத செய்தி ஒன்று திடீரென்று அவன் காதுக்கு எட்டியது. "தகப்பனுர் மாரடைப்பால் மாண்டு விட்டார்" என்று வேலைக்காரனொருவன் ஓடோடி வந்து இயம்பிவிட்டு விம்மி அழுதான். நரேந்திரன் இடிவிழுந் தாற்போல் ஆனுன். அச்செய்தி கேட்டு இளைஞன் வீட் டுக்கு விரைந்தோடினுன். தான் கேள்வியுற்றது மெய் தான்; சற்று நேரத்துக்கு முன்பு தன் பிதாவாயிருந்தவர் இப்போது பிணமாய்க் கிடக்கிருர்! அன்னையும் உடன் பிறந்தவர்களும் அலறிப் பதறிக்கொண்டிருக்கையில் தான் மட்டும் துயரத்தால் பிரமித்துப்போய் பேசவும் அழவும் இயலாதவனுய் அசைவற்று நின்றுகொண்டிருந்தான்.

ஆண்மக்களிலே முதலானவனுகிய நரேந்திரனுல் தகனக் கிரியை முதலானவை முறையே செய்து முடிக்கப் பட்டன.

காலமாய்விட்ட விஸ்வநாத தத்தர் தம் குடும்பத்துக்கு ஆஸ்தி எதுவும் தேடிவைத்துவிட்டுப் போகவில்லை. உடைமையே வடிவெடுத்திருந்த குடும்பத்துக்கு திடீரென்று வறுமை நோய் வந்துவிட்டது. மூத்தமகனுகிய நரேந்திரனை முகாமையாக வைத்துக் கொண்டு புதியவாழ்வைத் துவக்கவேண்டிய அவசியம் புவனேஸ்வரி மாதாவுக்கு ஏற்பட்டது. அப்போது அவன் சட்டகலாசாலையில் படித்துக் கொண்டிருந்தான். அன்றன்றைக்கு வேண்டிய சாப்பாட்டுக்கும் வகையில்லாதவாறு வறுமைப்பிணி அவர்கள்பால் வந்துவிட்டது. எப்படிக் காலக்ஷேபம் பண்ணினுர்கள் என்பதைப் பற்றிய மர்மம் தாய்க்கும் பிள்ளைக்கும்தான் தெரிந்திருந்தது.

கல்லூரிக்கு வண்டி அமர்த்திக் கொண்டு போவதை நரேந்திரன் அறவே நிறுத்தி விட்டான். நெடுந்தூரம் கால் நலிய நடந்துபோக வேண்டியதாயிற்று. தரித்திருந்த உடையும் நாளடைவில் பழுது பட்டதாயும் எளியதாயும் மாறிவிட்டது. குடை, பாதரக்ஷை போன்ற பெருமிதப் பொருள்கள் இப்போது அவனுக்குக் கிட்டாதவைகளாகி விட்டன. அவனும் அவைகளை வெட்டென மறந்து விட்டான். அன்ன ஆகாரம் சிறிதேனுமின்றி அவன் கழித்த நாட்கள் எத்தனை எத்தனையோ! பசியால் வாடி அங்கம் தளர்வுற்ற நாட்களும் பல உண்டு.

இவ்வாறெல்லாம் படாத இன்னல்களுக்கு ஆளாகி அவன் காலம் கழித்து வருங்காலையில் 'தனித்து வாராது துயரம்' என்ற பழமொழிக்கிணங்க மற்றொரு அல்லல் வந்து அவனை அலைக்கழித்தது. நரேந்திரன் வசித்துவந்த வீடு தங்களுக்குச் சொந்தமானதென்று தாயாதிகள் நீதி மன்றத்திலே வழக்குத்தொடுத்து விட்டார்கள். மற்றவர் களுக்குத் தெரியாது மறைந்து கிடந்த இவர்களது எளிமையை அவ்வழக்கு வெளிப்படுத்திவிட்டது. மேலும் அது நெடுநாள் தொடர்ந்துகொண்டும் போனது. ஆனால் நரேந் திரனோ இவைகளைக்கண்டு மருண்டுபோகவில்லை. இடுக் கண் அதிகரிக்க அதிகரிக்க அவனது உள்வலிவும் பெருகிக் கொண்டே போயிற்று. பிதாவைப்போன்றே பிள்ளையும் தோல்வி எதற்கும் இடம் கொடாதவன் ஆனான். கடைசியாக வழக்கும் அவனுக்கு அனுகூலமாகவே முடிந் தது. அதன் பிறகு அவ்விளைஞனது பெருமுயற்சியால் தத்தர் குடும்பம் வறுமைப் பிணியின்றும் ஒருவாறு மீளலாயிற்று.

கல்லூரியில் நியமித்திருந்த புஸ்தகங்களை மட்டும் படிப்பது போதாது. பரீக்ஷையில் தேர்தற்குமட்டும் அவைகள் போதுமானவை. பொது அறிவுக்கு வேறு பல புஸ்தகங்கள் படிக்கவேண்டும் என்பது நரேந்திரனது கொள்கை. 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப் பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு' என்ற மறை மொழிக்கிணங்க பொருள்களை விசாரித்து உள்ளவாறு அறிந்துகொள்ள வல்லவனாதலே கல்வியின் முடிவான நோக்கம் என்று இவன் கருதிவந்தான். அக்கருத்தை

அடிப்படையாக வைத்துக்கொண்டே அக்காலத்துப் பெரியார்களுடைய கொள்கைகளையும், அப்போதைக்கப்போது பத்திரிகை வாயிலாக வெளியாகும் நூதனவிஷயங்களையும் அவன் ஆராய்ந்து வந்தான். நரேந்திரனது கல்லூரித் தலைமை ஆசிரியர் ஹேஸ்டீ என்பவர் இவனது அறிவைப் புகழ்ந்து பேசியதாவது:– "நரேந்திரநாத தத்தன் ஒரு பேரறிவாளி. நான் உலகெங்கும் பிரயாணம் செய்திருக்கிறேன்; ஆனால் அறிவு, ஆற்றல், இவைகளில் இவனுக்கு ஒப்பானவர்களை ஜெர்மனி நாட்டு சர்வகலாசாலைகளில் இருக்கும் தத்துவநூல் ஆராய்ச்சி மாணவர்களிடையிலும் நான் கண்டதில்லை. வாழ்விலே இவன் பெரும்பேறு எய்துவான் என்பது உறுதி."

இசை ஞானத்தில் இவன் மேன்மையுற்றிருந்தான் என்பது முன்னமே பகரப்பட்டது. அதற்குத்துணையாக கல்லூரியில் நாடகங்கள் நடிக்கவும் இவன் கற்றுக்கொண்டான். இக்கலைஞானத்திலே இவன் எத்தகைய மேம்பாடு பெற்றிருந்தான் என்பதை இவனது நடிப்பைக்காணலுற்றவர்கள்தான் அறிதல் கூடும். தேகப்பயிற்சிகளுள் சிலம்பம் சிறந்ததோர் வித்தை. அச்சிலம்ப வித்தையிலே நரேந்திரன் தேர்ச்சி மிகப்பெற்றிருந்தான். தேகவலிமையிலே மிக்கார்களையும் இவ்வித்தையின் துணையைக்கொண்டு தோற்கடிக்கவல்ல சில மர்மங்களையும் அவன் கற்றிருந்தான். ஒருநாள் ஒரு சிலம்பப் பந்தயத்தில் வயது முதிர்ந்தவனும் வித்தையில் வல்லவனுமான ஒருவனுடன் எதிர்த்து விளையாட நரேந்திரன் முன்வந்தான். வேடிக்கை பார்க்க வந்தவர்கள் சிறியவனாகிய இவனுக்குச் சிலம்பப்

போர் விளையாட்டில் என்ன விபத்து நேரிடுமோ என்று அஞ்சினர். ஆனால் வீரம் ததும்பிய இவ்விளைஞன் பேர் பெற்ற அம்மல்லனுடன் நெடுநேரம் எதிர்த்து விளையாடினது மல்லாமல் முடிவில் எதிரியின் சிலம்பம் சின்ன பின்னமாக உடைந்து விழச்செய்தது பார்த்தோர்க்குப் பெருவியப்பூட்டியது.

வாழ்வின் செயல்கள் அனைத்திலும் ஒருவன் தூயனாய் இருக்கவேண்டும் என்பது நரேந்திரனுடைய தெளிந்த கொள்கை. பலவீனம் வாழ்க்கைக்குப் பயன்படாது. வலிமைபடைத்த வீரன்தான் நன்மையைக் கடைப்பிடிக்க முடியும். விரதங்களுள் பெரியதாகிய பிரம்மசரிய விரதம் ஒன்றே மாணக்கன் ஒருவனது குறிக்கோளாய் இருக்க வேண்டும். ஆற்றல் அன்பு அறிவு ஆகியவைகளை அது ஒருங்கே அளிக்கின்றது. "உரன் என்னும் தோட்டியான் ஓர் ஐந்தும் காப்பான் வரன் என்னும் வைப்புக்கோர் வித்து" என்னும் பொய்யாமொழிக்கு அணிகலமாக இலங்கினன் தத்தர்குலக்கொழுந்தாகிய இக்குமரன். நரேந்திரன் மாட்டிருந்த ஞாபகசக்தி வரம்புகடந்தது. அவன் பூண்டொழுகிய பிரம்மசரிய விரதமே அதற்குக் காரணமாயிற்று. தேகவலிமையில் ஒரு வீரனாகவும், மனோ உறுதியிலே ஒரு மன்னனாகவும், கல்வியிலே ஒரு பண்டிதனாகவும், சங்கீதத்திலே ஒரு வித்வானாகவும், வாழ்வின் லக்ஷியத்திலே ஒரு தீர்க்கதரிசியாகவும் அவன் திகழ்ந்து வந்தான்.

---

## ஐந்தாம் அத்தியாயம்

## குருவுக்கு ஏற்ற சிஷ்யன்

மனிதன் கடவுளைக் காணமுடியுமா? கடவுளைக்கண்ட பெரியார் யாராவது இவ்வுலகில் இருக்கின்றாரா? இத்தகைய கேள்விகள் இடை இடையே நரேந்திரனது உள்ளத்தில் உதிக்கும். பெரியவர்கள் என உலகம் மதித்த பலரிடம் சென்று அவன் இக்கேள்விகளைக் கேட்டுவந்தான். இதையெல்லாம் கவனித்துவந்த அவனுடைய நெருங்கிய உறவினர் ஒருவர் அவனையழைத்து, "பிள்ளாய்! நீ ஏன் பிரம சமாஜத்துக்கும் வேறுபல இடங்களுக்கும் வீணாய் ஓடியலைகின்றனை? கடவுளைக் கண்டவரைக் காண நீ விரும்பின் இந்நகருக்கு அருகாமையிலே, வடபுறத்திலே, கங்காதீரத்திலே திகழும் தக்ஷிணேஸ்வர ஆலயத்துக்குச் செல்வாயாக. அவ்வாலயத்தின்கண் எழுந்தருளியிருக்கும் காளிகா தேவியின் அருட்பிரசாதத்தைப் பருகி பரவசமடைந்திருக்கும் பெரியார் ஒருவர் ஆங்கு வாழ்ந்துவருகிறார். உன் மனத்தகத்தே மலிந்து கிடக்கும் மயக்கத்தை மாற்ற வல்லவர் அவர் ஒருவரே யாவர்." என உறுதிமொழி கூறினர். நரேந்திரனும் ஆங்குச் சென்றுவர இசைந்தான்.

தக்ஷிணேஸ்வர ஆலயத்துக்குத் தனிப்பெருமையையும் புகழையும் தேடிவைத்தவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர். புனித வாழ்வும் பாரமார்த்திகமும் கடுந்தவமும் சுவானுபூதியும் ஒன்று சேர்ந்து இப்பெரியாரது வாழ்வில் துலங்கியிருந்தன. கடவுளுடைய அருளுக்குப் புறம்பான எதையும்

இவர் இவ்வுலகிலே அடைய விரும்பவில்லை. கடவுள் ஒருவரே மெய்ப்பொருள் என்பதற்கு இவரது புனித வாழ்வு அத்தாக்ஷியாயிற்று. சுருங்கச் சொல்லின் பரதகண்டம் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பாலித்துவந்த பாரமார்த்திக நாகரீகமே வடிவெடுத்தவர் பரமஹம்சர். இவரைக்காண நரேந்திரன் வருகின்றான். நவீனக்கொள்கையும் கல்வி முறையும் நாகரிகமும் வடிவெடுத்தவன் இவ்விளைஞன். இவன் பரமஹம்சரை அணுகினதன் வாயிலாக இந்தியாவின் புராதன சரித்திரமும் எதிர்கால சரித்திரமும் ஒன்றையொன்று சந்தித்தன என்று சொல்லலாம். பரமஹம்சரை உயிர் என்றும் நரேந்திரனை உடல் என்றும் பகரவேண்டும். உடல் இல்லாத உயிரோ உயிர் அற்ற உடலோ பயன் படாது. இந்து மதமானது உலகெங்கும் சிறந்து ஓங்குதற்கேற்ற சீர்மையை இவ்விருவர்களுடைய சந்திப்பில் பெற்றது.

தக்ஷிணேஸ்வரம் ஏகுமாறு ஏவப்பட்ட நரேந்திரனும் 1880 ம் ஆண்டு நவம்பர் மாதத்திலே அப்புண்ணிய க்ஷேத்திரத்திற்குப் புறப்பட்டான். போகும் வழியில் தனது கேள்விக்கு என்ன விடை வருமோ என்ற ஐயம் ஒருபுறமும் ஆவல் மற்றொருபுறமும் இவ் விளைஞனை பரிதபிக்கச் செய்தன. பரமஹம்சதேவரது சன்னிதானத்துக்கு இவன் வருகிறான்; இவனைக் கண்டதும் அவர் பரவசமடைகிறார்; பழைய நண்பனொருவனைக் கண்டவர்போல் அவர் பிரலாபித்து உரையாடுகிறார். "எத்தனை நாள் நான் ஆவலுடன் உனக்காகக் காத்திருப்பது!" என்று இரங்கியபான்மையில் உரைத்தார். கண்குளிர இவ்விளைஞனைப் பார்த்த வண்ண

மாயிருந்தார். மருள் நிறைந்த கல்கத்தா நகரிலே அருள் நிறைந்த இத்தகைய புனிதன் ஒருவனும் பிறப்பானே என்று அவர் வியந்தார். பாட்டு ஒன்று பாடும்படி நரேந்திரனை அவர் வேண்டினர். பிள்ளையும் அதற்கிணங்கிப் பாடினன். அவனது கானத்தைக்கேட்டுப் பரமஹம்சர் திரும்பவும் பரவசமடைந்துவிட்டார். "நீவிர் கடவுளைக் கண்டதுண்டா?" என்ற தனது பழைய கேள்வியை இவரிடத்தும் நரேந்திரன் சமர்ப்பித்தான். "ஆம், பிள்ளாய் நான் அவரை இடையறுதுகண்டு களிகூறுகிறேன்; ஊனக் கண்ணால் உன்னை நான் காண்பதை விடப் பன்மடங்கு அதிகத் தெளிவுடனே அகக்கண்ணால் அவரை அறிகின்றேன். வேண்டுமானல் கடவுளை உனக்கும் காட்டுகிறேன்." என்றார் கருணாமூர்த்தி. வலியுறு இவ்வார்த்தைகளைக்கேட்ட நரேந்திரனது உள்ளம் பூரித்தது; உடல் விகசித்தது; உரோமம் சிலிர்த்தது. ஆனல் "நன்கு ஆராயுமுன் நான் இவரை நம்பிவிடலாகாது." என்று அவன் தீர்மானித்தான். அவனுடைய உள்ளம் அப்பெரியவரது அன்புக்கு வசப்பட்டது எனினும் அவரை ஒரு நிறைஞானியென ஏற்றுக்கொள்ள அவ்விளைஞனது அறிவு இசையவில்லை.

தம்மிடம் அடிக்கடி வரவேண்டுமென்று நரேந்திரனைப் பரமஹம்சர் அன்புடன் வேண்டிக்கொண்டார். தாய் ஒருத்தி தன் சேயிடம் வைத்திருக்கும் அன்பை விடப் பன்மடங்கு அவ்வன்பு பெரியது. மூன்றும்முறை நரேந்திரன் தக்ஷிணேசுவரத்துக்குச் சென்றிருந்தான். ஸ்ரீ ராமகிருஷ்ணர் முன்னிலையில் அவன் அமைதியுற்று

அமர்ந்திருக்கையில் பரமஹம்சதேவர் இவ்வுலக நினைவை யெல்லாம் கடந்த பரவச நிலையிலிருந்தார். ஆழ்ந்த கருத்துள்ளவராய் அவர் நரேந்திரனை அணுகி தனது வலக்கரத்தால் அவனது நெஞ்சத்தைத் தொட்டார். திடீரென்று இளைஞனிடத்து பெரும் மாறுபாடு ஒன்று உண்டாயிற்று. "ஆ, என்ன செய்கின்றீர்!" என்று சொல்லிக் கொண்டே அவன் புற உலக பிரக்ஞையை இழந்துவிட்டான். சிறிதுநேரம் சென்றபின் ஸ்ரீ ராமகிருஷ்ணர் திரும்பவும் அவனுடைய இதயத்தைத் தீண்டினர். துயிலெழுந்தாற்போல நரேந்திரன் விழிப்புற்றான். அப்போது அவனுடைய உடல்உற்சாகமும், உள்ளம்தெளிவும் பெற்றிருந்தன. அவனிடம் வருவிக்கப்பட்டிருந்தது மயக்கமும் அல்ல; உறக்கமும் அல்ல. இவையாவையும் கடந்த சமாதி நிலை அது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இயல்பாய் இருப்பது அந்நிலையிலே தான். ஆனால் இன்னும் பரிபக்குவமடையாத நரேந்திரன் பலவந்தமாக அப்பெருநிலையினுள் இழுத்துச் செல்லப்பட்டான். ஆதலாலேதான் அவன் சிறிது மருண்டு போய்விட்டான். எனினும் அதுமுதல் அவன் குருநாதரால் ஆட்கொள்ளப்பட்டவன் ஆனான். அவனது ஞான வாழ்வு விரிவடைந்து கொண்டே போயிற்று.

நரேந்திரனிடமிருந்த தெய்விக மாண்புகளை யெல்லாம் அவனுடைய குருதேவர் தெளிவுபட உணர்ந்திருந்தார். ஆகையால் அவர் அவனை சிஷ்யன் என்கிற முறையில் கருதவில்லை. அவனைக் காணும்போதெல்லாம் அவர் தமக்கு நாராயணதரிசனம் அல்லது சிவதரிசனம் கிடைத்ததாக உணர்ந்தார். நரேந்திரன் எத்தகைய துஷ்டர்க

ஞுடன் பழகினுலும்எத்தகைய துச்ச உணவை உண்டாலும் அவனது மகிமைக்கு ஒருநாளும் பங்கம் வந்து விடாது என்பது அவரது துணிபு. அந்த இளைஞுனிடம் ஞானக்கினி ஒளிவீசி மிளிர்ந்ததை பரமஹம்சர் ஒருவரே தெளிவுற அறிந்திருந்தார்.

கடவுள் எத்தகையவர் என்பதைப்பற்றிய விவாதம் ஒன்று ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணருடைய முன்னிலையில் இளம் சிஷ்யர்களுக்கிடையில் உண்டாயிற்று. அப்பேச்சுப் போட்டியில் நரேந்திரன் மற்றவர்களையெல்லாம் வாய் அடக்கிவிட்டான். யுக்திபூர்வமாக தன்கொள்கையை மற்றவர்களிடம் செலுத்திவந்தான். இவையாவையும் செவி மடுத்த ஸ்ரீராமகிருஷ்ணரது மனதுவேறு ஏதோ ஓர்உயரிய நிலைக்குப் போய்விட்டது. அவர் அறையைவிட்டு வெளியேகி கங்கைக் கரையோரம்போய்விட்டார். ஆங்கு அவர் கண்ட நூதனக்காட்சி ஒன்றைத் தம் சிஷ்யர்களுக்குக் கூப்பிட்டுக்காண்பித்தார். கரையோரம் பிணம்ஒன்று ஒதுக்கப் பட்டிருந்தது. சில நாய்கள் கூடிக்கொண்டு அதைப் பிய்த்துப் புசித்துக் கொண்டிருந்தன. ஆனுல் அப்பிணத்தை அணுகமுடியாத வேறு சிலநாய்கள் எட்ட நின்றுகொண்டு குலைத்துக்கொண்டும் பல்லைக் காட்டி உருமிக் கொண்டும் ஊளையிட்டுக் கொண்டும் இருந்தன. சிஷ்யர்களும் இந்த வேடிக்கையைப் பார்த்தார்கள். இதன் அடிப்படையான கருத்து பசுமரத்தாணிபோல நரேந்திரனது மனதில் பாய்ந்தது. அதாவது கடவுளுடைய பேரருளைப் புசித்துப் பரவசமடைந்தவர்கள் பேச்சற்று மூச்சற்று சும்மாயிருக்கையிலே வெறும் வாய்ப்பேச்சாளர்கள் அக்கடவுளைப்பற்றி

வாதாடி வீண்காலம் போக்கி வருகின்றனர்! இவ்விதம் மேலான தத்துவங்கள் பலவற்றை பரமஹம்ஸதேவர் நரேந்திரனுக்குச் சொல்லாமல் சொல்லி அவனைச் சீர்ப் படுத்திவந்தார்.

தனக்கு உற்ற வறுமைநோயை நீக்கிவைக்கும்படி தேவி ஜகன்மாதாவிடம் பிரார்த்திக்கலாகாதா என்று நரேந்திரன் ஒருதடவை ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் விண்ணப்பித்தான். அதைச்செவியுற்ற அண்ணல் "வேண்டுமானால் நீயே அம்பிகையின் சன்னதிக்குச்சென்று அத்தகைய பிரார்த்தனை செய்துவா" என்று மறுமொழி கூறினர். நரேந்திரனும் கோயிலுக்குள் சென்று அம்பிகையை வழுத்தினன். ஆனால் உணவு உடை வரம் கேட்க மறந்துவிட்டான். இரண்டாந் தடவை ஸ்ரீ ராமகிருஷ்ணர் அனுப்பிவைத்தார். அப்பொழுதும் அவன் அதை மறந்துவிட்டு ஞானமும் பக்தியும் வேண்டுமென்று வழுத்தினன். அவனுடைய ஞாபகசக்தி அவ்வளவு எளிதாய்ப் போய்விடலாகாதென்று பரமஹம்சர் திரஸ்கரித்து நரேந்திரனை மூன்றும்முறை கோயிலுக்குள் அனுப்பினர். இப்பொழுது உணவு வரத்தைப்பற்றி அவன் மறக்கவில்லை. ஆனால் இத்தகைய அற்பப் பொருள் வேண்டுமென்று தெய்வத்திடத்து விண்ணப்பிப்பது பொருந்துமாவென்று அவன் வெட்கப்பட்டுத் திரும்பிவிட்டான். "இவ்வுலக வாழ்வுக்கேற்ற பொருள்கள் வேண்டுமென்று பிரார்த்திக்க உன்னலேயே முடியவில்லையே! அது எனக்கு எங்ஙனம் சாத்தியமாகும்?" என்று பரமஹம்சர் பின்பு பகர்ந்தார். ஆக இத்தகைய குருவும் சிஷ்யனும் ஒருநாளும் கடவு

விடத்து கீழான பொருள்களைப்பற்றி பிரார்த்தித்தது கிடையாது.

மெய்யடியார்களையும் புனிதர்களையும் நிந்திக்கும் இயல்புடையவர்கள் இவ்வுலகில் பலர் இருக்கின்றனர். ஆனால் கடவுளின் அருளை நாடுவோர் அவர்களது புன் மொழிக்கு செவிசாய்க்கலாகாது. பெருந்தன்மை வாய்ந்த யானை போன்று அவர்கள் சன்மார்க்கத்திலே பிரவேசிக்க வேண்டும் என்று பரமஹம்ஸர் நரேந்திரனுக்குப் புகட்டி யிருந்தார். ஒருநாள் அவர் நரேந்திரனைப் பார்த்து, "உன்னைப்பற்றிப் புறங்கூறும் மாந்தர்பால் நீ என்ன எண்ணம் கொள்வாய்?" என்று கேட்டார். "ஏன்! நாய்கள் சில என்னைக்கண்டு குரைக்கின்றன என்று கருதுவேன்." என்று அலட்சியமாகத் தயங்காது இளைஞன் பதில் விடுத்தான். இதைக்கேட்ட குருதேவர் உடல் குலுங்க நகைத்தார். "இல்லை, இல்லை; குழந்தாய், இவ்விஷயத்தில் வரம்பு கடந்து போய்விடாதே. அவர்கள் சொல்லை நீ காதில் போட்டுக்கொள்ள வேண்டாம். ஆனால் அவர்கள் நாராயணனது வடிவமென்பதை மறந்துவிடாதே; புனித வேடம் பூண்டிருப்பவனும் நாராயணன்; புன்மை வேடம் பூண்டிருப்பவனும் நாராயணன்; இதை யாண்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்" என்றார்.

---

## ஆறும் அத்தியாயம்

# பெரும்பேறு அடைதல்

**ஸ்ரீ** ராமகிருஷ்ண பரமஹம்சரிடம் நரேந்திரன் ஐந்து ஆண்டுகள் பழகி வந்தான். ஆரம்பத்தில் இடையிடையே அவரிடம் வந்துகொண்டிருந்த இந்த இளைஞன் இப்பொழுது அடிக்கடி வரவும் பலநாள் அவருடனே இருந்துவிடவும் செய்தான். கல்லூரியில் வாசித்துக் கொண்டிருந்தவர்களும் வாசிப்பை முடித்தவர்களும் ஆகிய வேறு சில இளைஞர்களும் அப்பெரியாரிடம் சிஷ்யர்களாக வந்து சேர்ந்தார்கள். இவர்களைத் தவிர இல்லறத்தார் பலர் அங்கு வரவும் செய்தனர். பரமஹம்சருக்கு தொண்டையில் ஒரு பிளவை உண்டாயிற்று. ஒருவேளை அது பேச்சின் மிகுதியால் ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அந்நோய் அவரது உடலையே ஒடுக்கிவிடுதற்கு வந்திருக்கக் கூடுமென்று உணர்ந்த சிஷ்யர்கள் அவரை தக்ஷிணேஸ்வரத்திலிருந்து சிகிச்சையின் பொருட்டு கல்கத்தாவுக்கு அழைத்து வந்துவிட்டார்கள். அவருக்குப் பணிவிடை செய்வதற்காக சிஷ்யகூட்டம் தங்களுக்கிடையிலே முறை வைத்துக் கொண்டு அல்லும் பகலும் அவருக்கு அருகில் இருந்து வந்தார்கள்.

இங்ஙனம் மாதங்கள் சில கழிந்தன. இதற்குள்ளாக இவர்கள் வசித்துவந்த காசிப்பூர் தோட்டம் என்னும் பங்களாவானது சிறந்ததோர் தபோவனமாக மாறிவிட்டது. அரிய விஷயங்களைப்பற்றி சிலர் ஆராய்ச்சிசெய்து கொண்டிருப்பார்கள்; ஆழ்ந்த நிஷ்டையில் இன்னும் சிலர் அமர்ந்

திருப்பார்கள்; பரவசமடைந்து பாடிக்கொண்டிருப்பவர்கள் வேறு சிலர்; இறைவனது திருநாமங்களை உச்சரித்துக் கொண்டு ஆனந்தக்கூத்தாடுவார்கள் மற்றும் சிலர். இவ் வைபவங்களுக்கிடையில் நரேந்திரநாதரும் அவர் போன்ற இன்னும் சில வாலிபர்களும் பிரபஞ்ச வாழ்க்கையில் பற்றை ஒழித்துவந்தார்கள். அவர்களில் சிலருக்கு பரம ஹம்சதேவர் சந்நியாசம் கொடுத்தருளினர். அவர்கள் காவி யுடையணிந்து உலகப்பற்றை அறவே நீத்திருப்பதைக் கண்டு அவர் அகமகிழ்ச்சியடைந்தார். ஆனால் திரும்பவும் வசதியான காலம் வரும்பரியந்தம் காவியுடைகளை கழற்றி வைத்துவிட வேண்டுமென்று அவர் பணித்தருளினர். அந்த வாலிப சந்நியாசிகளுக்கு நம் கதாநாயகனுகிய விவேகா னந்த சுவாமிகள் தலைவராகத் திகழ்ந்தார்.

காசிப்பூர் தோட்டத்தில் இவ்வாறு காலம் கழிந்து வருகையில் பெரியார் பலரைப்பற்றிய பேச்சுக்கள் இடையி டையே எழலாயின. அவைகளுள் கௌதமபுத்தரைப் பற்றிய வரலாறு நரேந்திரரது உள்ளத்தை முற்றும் கவர்ந்தது. அக்கோமகன் இராஜபதவியையும் போகங் களையும் நீத்துவிட்டு வெளியேகினதும், கடுந்தவம் புரிந்த தும், பிறகு கயாவிலே ஞானம் அடைந்ததும் இவ்வாலிப ரது மனதில் ஊடுருவிப் பாய்ந்தன. ஒரு நாள் அவர் யாருக்கும் சொல்லாது குரு சகோதரர் இருவருடன் புத்த கயை நோக்கிப் புறப்பட்டுவிட்டார். மூவர் காணுமற் போனது காசிப்பூர் தோட்டபங்களாவில் பெருங் கவலையை உண்டுபண்ணிற்று. அதையெல்லாம் கேள்வியுற்ற ஸ்ரீராம

கிருஷ்ணர் "நரேந்திரன் விரைவில் வந்துவிடுவான் அவனைப்பற்றி கவலைப்படவேண்டாம்." என்றார். அம் மூவரும் புத்தகயைக்குச் சென்று சில நாள் தங்கியிருந்து வேண்டியவாறு நிஷ்டை புரிந்திருந்து திரும்பிவந்து சேர்ந்தார்கள்.

மனிதன் கடவுளில் லயித்திருக்கும் நிலைமைக்கு சமாதி என்று பெயர். சமாதி நிலையில் மிக உயர்ந்தது நிர்விகல்ப சமாதி என்பது. ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருளால் ஒருநாள் மாலை அத்தகைய உயர்ந்த அனுபவம் நரேந்திர நாதருக்கு உண்டாயிற்று. அதினின்று புற உலக உணர்ச்சி பெற்று எழுந்த நரேந்திரர் தாம் எப்பொழுதும் அந்தப் பேரானந் தத்திலேயே திளைத்திருக்கும்படி அருள் புரிய வேண்டு மென்று ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்தித்தார். பரமஹம் சரோ அச்சொற் கேட்டு திடுக்கிட்டார். சீடரைப் பார்த்து, "பிள்ளாய் நீ உன்னுடைய முக்தியை மட்டும் நாடுவது சுயநலமாகும். உன் போன்ற உத்தமர்களுக்கு சுய நலம் பொருந்தாது. நீ அடைந்திருக்கும் பிறவிப் பெரும் பயனை உலகத்தவருக்கும் உவந்து வழங்க வேண்டும். அவர்கள் ஈடேறுதற்கேற்ற வழியைக் காட்டிய பின்னரே நீ திரும் பவும் இந்த உயர்ந்த சமாதி நிலை எய்துவாய். அது பரியந் தம் இது மூடி வைக்கப் பட்டிருக்கிறது. திறவுகோல் என்கைவசம் உள்ளது; அறிந்தாயா?" என்றார். சிஷ்யரும் குருவின் ஆக்ஞைக்கு உடன் பட்டவராகக் கீழ்ப்படிந்து வணங்கினார்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரது தேகத்திலிருந்து சக்தி விரைவில் குறைந்து வந்தது. அதைக் காணலுற்ற நரேந்

திரர் அவர் இன்னும் சொற்ப நாளில் உடலை உகுத்து விடுவார் என்று அறிந்து கொண்டார். அவர் நாள் தோறும் அண்ணலிடமிருந்து ஆசிர்வாதம் பெற்று ஆத்ம சக்தியில் வளர்ந்து கொண்டே வந்தார். அடிக்கடி பரமஹம்சதேவர் அவரைத் தனியே அழைத்து வைத்துக் கொண்டு, மக்களுக்கு ஆத்ம சாதனம் புகட்டுதல், மடாலயம் ஸ்தாபித்தல் போன்ற விஷயங்களைப் பற்றி நல்லறிவு புகட்டி வந்தார். இதெல்லாம் முடிந்த பின்பு ஒரு நாள் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தமது அருட் செல்வரைத் தனியாகத் தமது அறைக்குள் வரவழைத்து நிஷ்டையில் உட்கார வைத்தார். சிறிது நேரத்துக்குள் குருவும் சிஷ்யரும் ஆழ்ந்த சமாதி நிலையில் மூழ்கிவிட்டனர். அப்போது அண்டங்கள் அனைத்தையுமே ஆக்கவோ அழிக்கவோ வல்ல அருட் சக்தியொன்று தம்முட் பிரவேசிப்பதை சிஷ்யர் உணர்ந்தார். பிறகு இருவருக்கும் சமாதி கலைந்தபோது பரமஹம்சதேவர் முத்து முத்தாக கண்ணீர் சிந்திக்கொண்டு "குழந்தாய் இத்தரணியில் தர்மத்தை நிலைநாட்டுதற்கென எனது தபோபலன்களை எல்லாம் இன்று உன்பால் ஒப்படைத்து விட்டேன். முழுமனதுடன் இப்பெருங் கடமையை நீ நிறைவேற்றுவாயாக" என்று பகர்ந்து அருளினர். இச்சம்பவம் நிகழ்ந்த இரண்டு மூன்று நாளில் பரமஹம்சதேவர் தமது ஊனுடலை நீத்து அகண்ட சத்-சித்- ஆனந்தத்தில் மூழ்கி மஹாசமாதியடைந்துவிட்டார். குரு ஆக்ஞைக்கு உட்பட்டு நடந்தது மட்டுமல்ல; குரு ஆட்டுவித்த வண்ணம் ஆடி எத்தகைய அருள்விருந்தை ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் உலகுக்கு வழங்கினர் என்பதை மேலே ஆராய்வோம்.

## ஏழாம் அத்தியாயம்

## மடாலயம் ஸ்தாபித்தல்

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் தேகத்தை உகுத்தான பிறகு அவருடைய இளம் சிஷ்யர்களுக்கு மண்ணுலக வாழ்க்கையில் பற்று அடியோடு போய்விட்டது. இவ்வுலக வாழ்வு நிலையற்றதென்றும், அது கனவுபோல் கடிதில் கடந்து போய்விடுமென்றும் அவர்கள் உணர்ந்தார்கள். தங்களுடைய குருநாதருடைய பாரமார்த்திகப் பெரு வாழ்வைப் பின்பற்றி தாங்களும் அத்தகைய புனிதவாழ்வு வாழவேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தார்கள். கல்கத்தாவிற்கு அருகாமையில் வாரநகர் என்னுமிடத்தில் ஜனசஞ்சாரம் இல்லாத ஒருபக்கம் குடியிருக்கத் தகுதியற்றிருந்த பாழும் கட்டிடமொன்று இவர்களுக்குக் கிடைத்தது. இவர்கள் அதில் குடியிருந்து தவம் புரியத் தீர்மானித்தார்கள். பெற்றோர்களிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் இவர்களுக்கு இன்னல்கள் பல உண்டாயின. ஆனால் தியாகமே வடிவெடுத்திருந்த இவ்விளைஞர்கள் அக்கஷ்டங்களை யெல்லாம் பொருள் படுத்தவில்லை. தங்களுடைய மேலாம் கருமத்திலேயே கண்ணும் கருத்துமாயிருந்தார்கள். மரணமே வரினும் தாங்கள் பூண்டிருந்த விரதத்தினின்று அணுவளவேனும் பிசகுவதில்லை என்று அவர்கள் அனைவரும் ஒன்றுகூடித் தீர்மானித்திருந்தார்கள்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பதிலாக நரேந்திரர் இப்பொழுது அவர்களுக்குத் தலைவராக அமைந்திருந்தார்.

உலகப்பற்று யாவையும் நீத்துவிட்டதற் கறிகுறியாக இப்பொழுது அவர்கள் அனைவரும் காவியுடை அணிந்து கொண்டார்கள். தாங்கள் வசித்துவந்த வீட்டில் ஓர் அறையில் தங்கள் குருநாதரது திருவுருவப் படம் ஒன்றை ஸ்தாபித்து, அதன்மூலம் அவர்கள் அவருக்கு நித்தம் வந்தனை வழிபாடுகள் செலுத்தி வந்தார்கள். கடவுளைக் காண்பது எங்ஙனம் என்ற ஒரே எண்ணம் தான் அல்லும் பகலும் அவர்களது உள்ளத்திலே குடிகொண்டிருந்தது. உணவைப்பற்றிய கவலை அறவே ஒழிந்துபோய்விட்டது. அகப்பட்ட உணவைப்புசித்து பசிப்பிணியைத் துடைத்து விட்டு தியானத்திலேயே காலத்தைக் கழித்து வந்தார்கள். உறக்கத்தில் கழிந்த நேரம் மிகச் சிறிதேயாம். உறக்கமே யில்லாது கழிந்த நாட்களும் பல இருந்தன. நெடு நேரம் பஜனை பண்ணுவார்கள்; இறைவனைப் போற்றிப் புகழ்ந்து சங்கீர்த்தனங்கள் பாடுவார்கள்; ஆநந்தக் கூத் தாடுவார்கள். கம்பீரமும் இனிமையும் வாய்க்கப்பெற்ற குரலிலே விவேகானந்த சுவாமிகள் பாடியதைக் கேட்டு மெய் சிலிர்த்து உட்கார்ந்திருப்பார்கள். அழலில் இட்ட மெழுகு போன்று அவர்களுடைய உள்ளம் கடவுளை நாடி நைந்துருகி வந்தது. கண்ணீரும் கம்பலையுமாய் பரிந்து பிரார்த்தனைகள் செய்வார்கள். உடல் உலகிலும் உள்ளம் ஈசனது சன்னிதியிலுமாக இவர்கள் காலம் கழிப்பா ராயினர்.

கல்லூரிகளில் கற்ற கல்வியைவிட ஆழ்ந்த முறையில் அவர்கள் இங்கு கல்வி கற்று வந்தார்கள் என்று சொல்ல லாம். பேரறிவு புகட்டும் நூல்கள் பலவற்றை அவர்கள்

ஆராய்ந்தார்கள். அவைகளைப் பற்றி சம்வாதங்கள் பல புரிந்தார்கள். ஹிந்து மதத்தின் பல சமயக் கொள்கைகள், மதஸ்தாபகர்கள், விஞ்ஞான ஆராய்ச்சி, தேச சரித்திரம், சமுதாய ஏற்பாடு ஆகிய பல விஷயங்களைப் பற்றி அவர்கள் விளக்கமுற விவரித்துப் பேசிவந்தார்கள். பரமஹம்சருடைய மேலாம் செய்தியை உலகெங்கும் வழங்குதற்கேற்ற பரிபாகத்தை இந்த இளம் துறவியர்கள் பெற்று வந்தார்கள். அவர்களுக்கெல்லாம் தலைவராக விளங்கிய விவேகானந்த சுவாமிகள் தம்மை ஏதோ ஒரு சக்தி உந்தித்தள்ளுவதாகவும் தாம் வெளியேகினலொழிய தமது மேலான எண்ணம் நிறைவேறாது என்றும் உணர்ந்து வந்தார்.

---

## எட்டாம் அத்தியாயம்

## தீர்த்த யாத்திரை

ஓடுகின்ற நதியிடத்தும் சஞ்சரிக்கின்ற சந்நியாசி மாட்டும் பொல்லாங்கு எதுவும் படிகிறதில்லை என்னும் கருத்துக்கு ஒப்ப விவேகானந்த சுவாமிகள் வாரநகர் மடத்திலிருந்து தேச சஞ்சாரம் செய்ய வெளியில் புறப்பட்டுவிட்டார். துறவறத்துக் கேற்ப கையில் பொருள் எதையும் அவர் எடுத்துக்கொள்ளவில்லை. பணத்தைக் கையாளுகிறதில்லை என்றும் அவர் தீர்மானித்தார். இவரைத் தேடிவருகிற உணவைமட்டும் ஏற்றுக்கொள்ள எண்ணினர். நெடும் பிரயாணம் செய்யவேண்டிய இடத்து

யாராவது புகை வண்டிக்குச் சீட்டு வாங்கிக் கொடுத்தால் அதைப் பெற்றுக்கொள்வதாக முடிவு பண்ணியிருந்தார். ஏனைய சந்தர்ப்பங்களில் கால்நடையாகவே போவதாக கருத்திலில் வைத்தார். பிரம்மதேஜஸ் திகழ்ந்த திருமுக மும், ராஜகுமாரன்போன்ற கட்டழகும், கம்பீரமான திரு மேனியும் தாங்கிய சுவாமிகள் பற்பல இடங்களில் மக்க ளுக்கிடையே தென்பட்டார். கற்றவர்கள் இவரோடு உரையாடக் காமுறுவர். மற்றவர்கள் இவரைக் கண்டு சேவிக்க முன்வருவர். பேரும் புகழும் தம்மீது சுமத்தப் படுவதை விரும்பாத சுவாமிகள் தம்முடைய பெயரை அடிக்கடி மாற்றிக்கொண்டார். ஆயினும் மாந்தர்க்கிடை யிலே அவர் ஒரு மாமுனிவராக விலங்கியது வெளிப் படை.

அவர் சென்று பார்த்த பதிகளுள் குறிப்பிடத்தக்கது காசி. பரத கண்டத்தின் பாரமார்த்திகப் பொக்கிஷம் முழுதும் இப்பதியின் கண் புதைந்திருக்கிறது என்று சொல்வது மிகையாகாது. சுவாமிகளும் இப்புனித க்ஷேத் திரத்தில் மகோன்னத மனநிலை படைத்தவராய் சிறிது காலம் வதிந்துவந்தார். அப்பொழுது குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி ஒன்று அங்கு நிகழ்ந்தது. ஒரு நாள் இவர் ஒரு வீதியிலே போய்க்கொண்டிருக்கையில் குரங்குக் கூட்டம் ஒன்று இவரைப் பின்தொடர்ந்தது. அம்மிருகங்களிட மிருந்து மீண்டுகொள்ள இவர் விரைந்து சென்றார். ஆனால் அவைகளும் வேகமாய் இவரைப் பின்பற்றி வந்தன. முடிவில் அவ்வானரங்கள் இவரைச் சூழ்ந்து கொண்டு தாக்கும் தருவாயில் இருந்தபோது அவ்வழியே

சென்று கொண்டிருந்த வயோதிக சந்நியாசியொருவர், "ஓடாதே, மிருகத்தை எதிர்த்துநில்" என்று உரைத்தார். இவரும் அக்கணமே மருள் நீங்கப்பெற்று மெய்யுணர்வு யெய்தி எதிர்த்து நின்றார். காட்சி திடீரென்று மாறியது. துரத்திக் கொண்டு வந்த வானரங்கள் திகைத்து நாலுபக்க மும் சிதறி ஓடிவிட்டன. சுவாமிகளுக்கு மேலாம் கருத்து ஒன்று விளங்கிற்று. மிருகத்தை மட்டுமல்ல; மிருகத் தன்மை வாய்ந்த யாவற்றையும், மருளப்பண்ணுகின்ற அனைத்தையும், மயக்குகின்ற எல்லாவற்றையும் எதிர்த்து நிற்க வேண்டும்; அவைகளுடன் போராட வேண்டும்; திகைத்து ஓடலாகாது என்பது அக்கருத்து. அயோத்தி யில் அவர் ஆனந்த பரவசம் அடைந்திருந்தார். அவர் வழி படும் கடவுளாகிய இராமபிரானது பிறப்பிட மன்றோ அது? புனித எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் ஊட்ட வல்ல இடங்களுக்குப் படாதபாடுபட்டும் சகிக்கவொண் ணாத அல்லல்களுக்கு ஆளாகியும் போவது தகுமென்று சுவாமிகள் கருதினர்.

தேச சரித்திர சம்பந்தமான ஊர்கள் பலவற்றைப் பார்த்த பிறகு சுவாமிகள் பிருந்தாவனத்துக்குப் போய்ச் சேர்ந்தார். பிரேமபக்தியைப் புகட்டியவனும் கீதாசாரியனு மான கண்ணபிரான் இளம்பிராயத்தில் வாழ்ந்து வந்த இடம் அது. ஆங்கு அவர் ஒரு நாள் கோவர்த்தனகிரியை பிரதக்ஷணம் பண்ணி வந்தார். அன்றைக்கு அவருக்கு ஆகாரம் எதுவும் வந்து சேரவில்லை. வனத்தினுள் போய்க் கொண்டிருந்த அவரை யார்தான் தேடிவந்து உணவளிக்கப் போகின்றனர்? எனினும் அன்னத்தைப்பற்றிய கவலையே

சிறிதும் இல்லாதவராய் அவர் கண்ணனைக் கருத்தில் வைத்தவராய் மலையை வலம்வந்து கொண்டிருந்தார். பசி யும் களைப்பும் அதிகரித்துவிட்டன. சேர்ந்தாற்போல மழை யும் வந்து அவரை முற்றும் நனைத்துவிட்டது. அந்நிலை யிலும் கண்ணனைப் பற்றிய எண்ணம்தான் அவரது சிந்தையில் குடிகொண்டிருந்தது. அது போழ்து இவரை அழைக்கின்ற குரல் ஒன்று திடீரென்று பின்புறமிருந்து இவரது காதில் விழுந்தது. ஆனால் திரும்பிப் பாராமலே சுவாமிகள் விரைந்து சென்றார். கூவியழைத்த அன்பன் இவருக்காக ஆகாரம் எடுத்து வந்திருப்பதாகச் சொல்லிக் கொண்டே நெடுந்தூரம் பின்தொடர்ந்து ஓடிவந்தான். இது தெய்வாதீனமோ வென்று உணர்ந்த சுவாமிகள் மேலும் இதை ஆராய்ந்தறிய வேண்டுமென்று எண்ணி விரைந்து ஓட ஆரம்பித்தார். அம்மனிதனும் சுமார் ஒரு மைல் தூரம் கூடவே பின்பற்றி ஓடிவந்து அவரைத் தடுத்து நிறுத்தி தான் கொண்டுவந்திருந்த ஆகாரத்தை ஏற்குமாறு பணிந்து விண்ணப்பித்துக்கொண்டான். சுவாமிகளும் அவனது விருப்பத்துக்கிணங்கி போஜனம் பண்ணினார். அவரது பசியடங்கவே அம்மனிதனும் வனத் தினுள் சென்று மறைந்து போய் விட்டான்! வனாந்தரத் தில் நிகழ்ந்த இந்த அற்புத நிகழ்ச்சியைக் கண்ணனது கருணை என்றே சுவாமிகள் புகழ்ந்து வாழ்த்தினர்.

பின்பு தபஸ்விகளின் உறைவிடமான ஹிமாலய பருவதத்துக்கு யாத்திரைபண்ண சுவாமிகள் விரும்பினார். அதன்படி உத்தர திசையை நோக்கிச்சென்றார். மலையி னடிவாரத்தில் ஆங்காங்குத் தவம்புரிந்துகொண்டிருந்த

தமது குருசகோதரர்களான அகண்டானந்தர், சாரதானந்தர் ஆகியவர்களை தற்செயலாகக் கண்டு மகிழ்வுற்றார். பிறகு அவர்களையும் தம்மோடு அழைத்துக்கொண்டு அவர் மலைநாட்டினுள் பிரவேசித்தார். உலகிலேயே மிக மிகப் பெரியதாகிய இப்பருவதத்தின் கம்பீரமான தோற்றம் சுவாமிகளின் மனதை மாண்புறச் செய்தது. அடர்ந்த ஆரண்யம், மலைவீழ் அருவிகள், ஓடும் ஓடைகள், அலையெறியும் ஆறுகள், பாடும் பறவைகள், வீசும் இளங்காற்று, ஓசை ஒலி யொன்றும் எட்டாத குகைகள் ஆகிய இவைகளுக்கிடையே பரந்த எண்ணங்கள் எண்ணியும், உயர்ந்த உணர்ச்சிகள் எய்தியும், ஆழ்ந்த நிஷ்டைகள் புரிந்தும் சுவாமிகள் காலம் போக்குவாராயினர். கண்ணுக்கு எட்டியவரையும் அதற்கப்பாலும் ஒழிவிலா திருக்கும் பனிக்கட்டியினுள் புதைந்துகிடந்த பர்வதங்களைப் பார்த்த மாத்திரத்திலே யாருக்கும் பரமானந்தம் உண்டாகும். அத்தகைய மகோன்னத மலையிலே வீற்றிருக்கும் சிவனார் போன்று நம் சுவாமிகளும் மனம் ஒடுங்கப் பெற்று சாந்த மூர்த்தியாகத் திகழ்ந்திருந்தார்.

ஹிமாலய பர்வதத்தினின்று ஹிரிஷீகேசம் வந்தானதும் சுவாமிகளுக்கு கடும் ஜுரம் வந்துவிட்டது. இரண்டு மூன்று நாள் அவர் பிரக்ஞை இல்லாமலும் இருந்தார். நாடி ஒழுங்காக அடிக்கவில்லை. சீதம் உடலெங்கும் பரவிற்று. இவருக்கு அந்தியகாலம் வந்துவிட்டதென்று எண்ணி குருசகோதரர்கள் திகில் அடைந்துவிட்டார்கள். என்ன செய்வதென்று அறியாமல் அவர்கள் ஏங்கியிருக்கையில் யாரோ ஒரு சந்நியாசி திடீரென்று அங்கு

வந்துசேர்ந்தார். அவர் வைத்திருந்த தேனில் ஏதோ ஒரு மாத்திரையைக் குழைத்து சுவாமிகளது வாயினுள் செலுத்தினர். சிறிது நேரத்தில் அவர் தெளிவுபெற்றெழுந்து குருசகோதரர்களைப் பார்த்து, "நான் மெய்ம் மறந்து கிடந்தபோது உயர்ந்த அனுபவம் ஒன்று காண லானேன். நான் இவ்வுலகில் சாதிக்கவேண்டிய அரும் பெரும் காரியம் பல உண்டு. அவைகளைப் பூர்த்தி பண்ணும்வரை ஓய்ந்து இருக்க என்னல் இயலாது. ஏகாந்தமான குகைவாசத்தை நான் நாடுவதெல்லாம் வீணே. நான் செய்துமுடிக்கவேண்டிய காரியத்தின் பொருட்டு உலகில் உலவும்படி ஏதோ ஒரு சக்தி என்னை ஏவுகிறது." என்ருர். தேகம் வலிவுபெற்ற பின் அவர் குருசகோதரர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு தன்னந் தனியராக தென்திசையாக பிரயாணம் பண்ணினுர்.

---

## ஒன்பதாம் அத்தியாயம்

### பண்டிதர் பாமரர்க்கிடையில்

பல அரசாங்கங்களுக்குத் தலைமைப் பட்டணமாயிருந்துவந்த டில்லியைப் பார்த்துவிட்டு சுவாமிகள் இராஜபுதனம் போய்ச்சேர்ந்தார். ஆங்கிருந்த சமஸ்தானங்களில் ஒன்ருன ஆழ்வார் ராஜ்யத்தில் அவர் பிரசன்னமானுர். சொற்பநாளில் அவரது பெருமை அவ்வூரெங்கும் பரவிவிட்டது. கற்றவர்களும் மற்றவர்களும், இந்துக்களும் முகமதியர்களும் திரள் திரளாய் அவரிடம் வரலாயினர்.

முகமதியர்கள் பலர் அவர்மீது பேரபிமானம்கொண்டு தங்களது இல்லங்களுக்கு அவரை அழைத்துச்சென்று இந்துக்களுடைய ஆசாரத்துக்கு ஒப்பு உணவு சமைத்துப் படைத்து உபசரித்தார்கள். சுவாமிகளும் சந்நியாச தர்மத்தை அனுசரித்து மக்களனைவரையும் கடவுளது குழந்தைகளாகப் பாராட்டி, அவர்கள் பக்தியுடன் படைக்கும் உணவை உவகையுடன் ஏற்றுவந்தார்.

சுவாமிகளின் மகிமை ஆழ்வார் மஹாராஜாவுக்கும் எட்டியது. அக்கோமகனும் ஒருதினம் பிரதானிகள் புடைசூழ சுவாமிகள் தங்கியிருந்த இடத்திற்குச் சென்று பணிவுடன் அவரை வணங்கினர். பிறகு பார் ஆளும் வேந்தனுக்கும் அருள் ஆளும் வேந்தனுக்கும் இடையில் பின்வரும் சம்பாஷணை நடைபெற்றது.

மஹாராஜா: பண்டிதராகிய நீவிர் பணம் சம்பாதியாது பிக்ஷை எடுப்பானேன்?

சுவாமிகள்: அரசே! பிரஜைகளைப் பரிபாலிப்பதைப் புறக்கணித்துவிட்டு, நீவிர் ஆங்கிலேயர்களுடன் கூடி வனத்தில் வேட்டையாடியும், நாட்டிற்குரிய பொருளை விரயம் பண்ணியும் வீண்காலம் கழிப்பானேன்?

மஹாராஜாவுடன் வந்திருந்தவர்கள் அவர் அஞ்சாது அளித்த மறுமொழியைக்கேட்டு மருண்டார்கள். "என்ன தைரியம்! இவரது கதி என்னுமோ?" என்று திகைத்தார்கள். ஆனால் கோமகனுக்கோ கோபம் வரவில்லை. அவர் சற்றுச் சும்மா இருந்தார். பிறகு "அது என் இஷ்டம்" என்று அவர் விடையிறுத்தார்.

"இரந்துண்பது என் இஷ்டம். ஆனல் சமூகத்துக்கு நான் செய்ய வேண்டிய கடமையில் தவறுவதில்லை." என்றார் சுவாமிகள்.

"விக்கிரகங்களை வணங்குவதில் எனக்கு விருப்பமில்லை; என்கதி என்னகும்?" என்று கேட்டுவிட்டு பரிகாசத்துடன் மஹாராஜா புன்னகை புரிந்தார்.

சுவாமிகள்: என்ன ஏளனம் பண்ணுகின்றீர்களோ?

மஹாராஜா: இல்லை சுவாமிகளே! பாமரர் போன்று நான் கல்லையும் மண்ணையும் உலோகத்தையும் வணங்கேன்; இது ஓர் அபராதம் எனின் இதற்காக நான் மறுமையில் துன்புற நேரிடுமோ?

சுவாமிகள்: நல்லது, ஒவ்வொருவரும் அவரவரது கொள்கையின்படி நடந்து கொள்ளட்டும்.

மஹாராஜாவின் கொள்கைக்கு சுவாமிகள் எப்படி இடந்தந்தாரென்று சிலர் ஐயமுற்றிருந்தனர். ஆனல் சிறிது நேரத்துக்குள் சுவாமிகள் நிலைமையை அடியோடு மாற்றிவிட்டார். ஆங்கு ஒரு சுவரில் மாட்டப்பெற்றிருந்த படமொன்றைக் கொண்டுவரும்படி அவர் ஏவினர். அதன்மீது காரித்துப்பும்படி திவானுக்குக் கட்டளையிட்டார். மற்றவர்களையும் அதே செயலில் அவர் தூண்டினர். ஆனல் அவர்களெல்லாரும் மருண்டு போனர்கள்; வெகுண்டார்கள்; வியர்வை கொட்டினர்கள். "ஏன்! இது வெறும் கண்ணுடியும் காகிதமும்தானே! இதன்மீது துப்புவதற்கு

உங்களுக்கு என்ன ஆக்ஷேபம்?" என்ஞர். "அது எங்கள் அரசர் பெருமானது படமல்லவா!" என்று அடங்கிய குரலில் சபையோர் உரைத்தார்கள். "அப்புகைப்படமானது மஹாராஜா அல்லவென்று உங்களுக்குத் தெரியும். அது போன்ற பிரதிபிம்பம் மாத்திரமே அது. ஆயினும் அதன் மூலம் நீங்கள் அவருக்கு மரியாதை காட்டுகிறீர்கள். அது போன்றே கல்லும் மண்ணும் கடவுள் ஆகிவிடமாட்டா. கல்லே, மண்ணே, தாமிரமே என்று யாரும் பிரார்த்திப்பதில்லை. சின்னங்களின் மூலம் கடவுளையே நினைத்து ஜனங்கள் வணங்குகின்றனர்" என்று சுவாமிகள் விளக்கிக் காட்டினர். இதையெல்லாம் செவியுற்ற இராஜா "பெரியோய், இவ்விஷயத்தில் நான் இது பரியந்தம் அறிவிலியாய் இருந்தேன்; இப்போது கண் விழித்துக்கொண்டேன்" என்று வினயத்துடன் தெரிவித்தார்.

அழகு பொருந்திய ஆபுமலைக்குச் சுவாமிகள் சென்று சில நாள் தங்கியிருந்தார். அங்கு ஒரு நாள் ஒரு பண்டிதருடன் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்து விட்டு சிரமபரிகாரம் செய்துகொள்ள சுவாமிகள் ஓரிடத்தில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது கேத்திரி மஹாராஜா அம்மலைக்கு யாத்திரை வந்திருந்தார். அரசரின் காரியதரிசி இவரைத் திண்ணைத்தூங்கி சோம்பேறி என்று நினைத்தார். சுவாமிகள் விழித்ததும் பரிகாசம் பண்ணும் முறையில் அவருடன் காரியதரிசி உரையாடினர். ஆனல் அந்தோ! சொற்ப நேரத்துக்குள் அவர் சாமானியமானவர் அல்லர் என்பது விளங்கிற்று. சுவாமிகளின் பெருமையை மஹாராஜாவிடம் காரியதரிசி தெரிவித்தார்.

கேத்திரி நாடாண்ட அம்மன்னர் மிகப்படித்தவர்; ஈஸ்வர பக்தியுடையவர். சுவாமிகளிடம் வினயத்துடன் அணுகி உரையாடினூர். சுவாமிகளுக்கும் அவர்மீது அபிமானம் மிக உண்டாயிற்று. வேந்தனது வேண்டுகோளுக்கிணங்கி சுவாமிகள் அவரைச் சிஷ்யராக ஏற்றுக்கொண்டார்.

மற்றும் பல சமஸ்தானங்களேயும் பம்பாய் நகரையும் பார்த்துவிட்டு சுவாமிகள் பூனுவிற்கு விஜயம் செய்தார். மஹா பண்டிதரெனவும் தேசாபிமானியெனவும் நாடெங்கும் பிரசித்தி பெற்றிருந்த பாலகங்காதர திலகருடன் இவ்வூரிலே சுமார் பத்துநாள் அவர் அமர்ந்திருந்தார். தேச முன்னேற்ற சம்பந்தமான பலவிஷயங்களே திலகருடன் அவர் உரையாடவும் செய்தார். இந்தியாவின் முன்னேற்றம் எப்பொழுதும் பாரமார்த்திக வாழ்வை அடிப்படையாகக்கொண்டது என்று இருவரும் கூடி முடிவுகட்டினர். அங்கிருந்து சுவாமிகள் பெல்காம் என்னும் பட்டணம் போய்ச்சேர்ந்தார். அங்குக் கற்றவர்களும் மற்றவர்களும் ஏராளமானவர்கள் வந்து விவேகானந்த சுவாமிகளே சூழ்ந்துகொண்டே இருந்தனர். அண்ணலும் அவர்களுக்கு வேண்டிய நற்புத்திகளேப் புகட்டிவந்தார். அவைகளில் இரண்டொன்று ஈண்டு குறிப்பிடத்தக்கவைகளாகும். அதாவது சதா ஔஷதம் சாப்பிடும் பழக்கத்துக்கு யாரும் ஆளாய்விடலாகாது. மனந்தான் அநேக வியாதிகளுக்குக் காரணம். ஆதலால் மனம் உற்சாகத்துடனும் மகிழ்ச்சியுடனும் தூய்மை பொருந்தியதாயும் இருந்தால் நோய்கள் பல எளிதில் தவிர்க்கப்படும். அத்துடன் தேகத்தைத் தளர்வுறச் செய்கின்ற இன்பம் எதிலும் மனிதன் ஈடுபட

லாகாது. நல்லார்க்கே உலகம் நலம் நிறைந்ததாகத் தோன்றும். பிறர்மீது குறைகூறுவது யாருக்கும் பொருந்தாது. எல்லார்க்கும் அன்பனாய் நடப்பவரிடத்து மற்றவர்களும் அன்பாய் நடந்துகொள்ளுவார்கள். பெல்காம்பட்டணத்திலே பலநாள் தங்கியிருக்கவேண்டுமென்று இப்பெரியாரைப் பலர் வேண்டிக்கொண்டார்கள். ஆனால் அவர் தமது தீர்த்தயாத்திரையை விரைவில் முடிக்கவேண்டுமென்று சொல்லிவிட்டு தக்ஷிணதிக்கை நோக்கிப் புறப்பட்டார்.

சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருந்தபோது, சுவாமிகள் உண்ண உணவில்லாது கழித்த நாட்களும் பல உண்டு. ஒருமுறை அவர் முதுவேனிற் காலத்தில் ரயில் வண்டியில் நெடும் பிரயாணம் பண்ண நேர்ந்தது. அப்போது எந்த ஸ்டேஷனிலும் விலை கொடுத்தாலொழிய குடிப்பதற்கும் ஜலம் அகப்படாது போய்விட்டது. சுவாமிகளோ கையில் பணம் வைத்துக்கொள்வதில்லை. ஆதலால் ஒருநாள் முழுதும் ஜலபானமுங்கூட இல்லாது அவர் வண்டியில் போய்க்கொண்டிருந்தார். அவரோடு பிரயாணம் பண்ணின ஒரு வணிகன் அவரைப் பரிகாசம் பண்ணிக்கொண்டே போனான். ஏனென்றால் பணம் சம்பாதியாத சோம்பேறியைக் காண அவனுக்குப் பிடிக்கவில்லை. மறுநாள் உச்சி வேளையில் ஒரு சந்திப்பு ஸ்டேஷனில் ரயில் வண்டி மாற்றுதற்காகத் தங்கு மண்டபம் ஒன்றில் பிரயாணிகள் காத்திருக்கவேண்டியதாயிற்று. ஏதோ கொஞ்சம் இனம் கொடுத்தவர்களை மட்டும் காவற்காரன் மண்டபத்தினுள் உட்காரவிட்டான். ஆதலால்

சுவாமிகள் மண்டபத்துக்குள் பிரவேசிக்கவும் முடியவில்லை. வேஷ்டி ஒன்றை நனைத்து, சுடுமணலின்மீது அதை விரித்து, ஒரு கம்பத்தின்மீது சாய்ந்துகொண்டு, மாளாத கடும் வெயிலில் அவர் உட்கார்ந்திருந்தார். அவர் எதிரே மண்டபத்தினுள் அமர்ந்திருந்த வணிகனுக்கு இதெல்லாம் வேடிக்கையாயிருந்தது. "சந்நியாசியாரே, பாரும்! நான் கஷ்டப்பட்டுப் பணம் சம்பாதிக்கிறேன்; ஆதலால் நிழலிலே வீற்றிருந்து பூரி, லட்டு முதலிய பட்சணங்கள் புசிக்கிறேன்! நீர் உலகைத் துறந்த பெரியோர் அல்லவா? ஆதலால் உலர்ந்த தொண்டையும் ஒடுங்கிய வயிறுந் தாங்கி வெயிலில் புழுங்கிக் கிடப்பது தான் உமது கதி!" என்று பரிகசித்தான். எரிசினம் ஊட்டும் இந்நிலையிலும் சுவாமிகளது முகத்துக்கு அணிகலமாக இலங்கிய சாந்தம் சிறிதும் மாறவில்லை.

அப்போது அவ்வூரைச் சார்ந்த மனிதன் ஒருவன் வலது கரத்திலே பெரிய பொட்டணமொன்றும் ஒரு லோட்டாவும், இடது கரத்திலே ஆசனமொன்றும் மண் கூஜாவில் குளிர்ந்த ஜலமும் பற்றி எடுத்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தான். ஓரிடத்தில் அவசரத்துடன் ஆசனத்தைப் பரப்பி, அதன்மீது தான் கொணர்ந்த பண்டங்களை வைத்துவிட்டு, "போஜனம் பண்ண எழுந்தருளும், சுவாமி!" என்று பசித்திருந்த சுவாமிகளை வணங்கி வேண்டினன். இவர் சற்று நேரம் ஒன்றும் பேசாதிருந்தார். ஆனால் அம்மனிதன் ஓயாது வேண்டியழைத்த போது அவர், "நான் உன்னை முன்பின் அறியேன்; நீ தேடுபவர் நானென்று தவறாக எண்ணுகிறாய் போலும்"

என்றார். "இல்லை, இல்லை, எனக்குக் காண்பிக்கப்பட்டவர் நீங்கள் தான். தயவு கூர்ந்து விரைவில் உணவேற்க வாருங்கள், சுவாமி" என்று பணிவுடன் திரும்பவும் அழைத்தான் புதியதாக வந்த அம்மனிதன். "நீ என்னை எங்குக் காணலுற்றாய்? விவரம் சொல்லுக" என்று சுவாமிகளும் மிக வியந்து வினவினார்.

அதற்கு அம்மனிதன், "அடியேன் இவ்வூரிலுள்ள ஒரு மிட்டாய்க் கடைக்காரன். இன்று நான் போஜனம் பண்ணியதும் சிறிது கண்ணுறங்கலாமென்று படுத்தேன். அப்போது ஸ்ரீ ராமபிரான் எனது கனவிற்றோன்றி, தங்களை நன்றாகக் குறிப்பிட்டுக் காட்டி, 'என் பக்தன் இரண்டு நாளாய் உண்ண உணவின்றி வருவதைக்காண நான் ஆற்றகில்லேன். பூரியும் கறியும் சமைத்து, மிட்டாய் வகைகள், குளிர்ந்த ஜலம், அமர்ந்திருக்க ஆசனம் இவைகளை எடுத்துக்கொண்டு ஸ்டேஷனுக்கு ஓடிவா' என்றார். விழித்தெழுந்த பேதையேன் இது வெறுங் கனவென்று எண்ணித் திரும்பிப்படுத்தேன். ஆனால் எம்பெருமான் மறுபடியும் என்னைத் தட்டி யெழுப்பி இப்பணியாற்ற ஆக்ஞாபித்தார். அவ்வண்ணமே அடி-யேனும் விரைந்து வந்துள்ளேன். தூரத்தில் வரும் போதே தேவரீரை அடையாளம் தெரிந்துகொண்டேன். பசியால் வாடியிருக்கும் பெரியோய், உண்ண எழுந்தருளும்" என்று பகர்ந்துகொண்டு கைகூப்பி வணங்கி வேண்டி நின்றான். தமது உபாசனா மூர்த்தியாகிய இராமபிரானது கருணையை நினைந்துகொண்டே சுவாமிகளும் அமுது பண்ணினார். நிகழ்ந்த யாவையும் வியப்புடன்

பார்த்துவந்த வணிகன் தனது அபராதத்தை க்ஷமித் தருளும்படி சுவாமிகளது அடியிணையில் விழுந்து நமஸ் கரித்து வேண்டினன். நிந்தை, ஸ்துதி, மானம், அவ மானம் இவை யாவையும் சமமாகப் பார்க்கும் தீர்க்கதரிசி யாகிய நம் துறவிவேந்தர் அவனிடம் தாம் வெகுளவில்லை யென்று உறுதி கூறினர்.

---

## பத்தாம் அத்தியாயம்

### கன்னியாகுமரியில்

தென்முகமாகப் பிரயாணம் பண்ணிய சுவாமிகள் பெங்களூர் வந்து சேர்ந்தார். சில நாளைக்குள் அறிஞர் பலருக்கு அவர் அறிமுகமானர். அப்போது திவானு யிருந்த சேஷாத்திரி ஐயர் சுவாமிகளின் மகிமையை யறிந்து தம் வீட்டிலேயே அவரை அதிதியாக அமர்ந் திருக்கச் செய்தார். பிறகு மஹாராஜா ஸ்ரீ சாமராஜேந்திர உடையார் அவர்களையும் நேரில் காண நேர்ந்தது. மஹா ராஜாவுக்கு அவர்மீது நாளேற ஏற அன்பும் மரியாதையும் அதிகரித்துக்கொண்டே வந்தன. சமஸ்தான நடைமுறை களைப்பற்றி சுவாமிகள் என்ன கருதினர் என்று ஒருநாள் மஹாராஜாவானவர் உத்தியோகஸ்தர்கள் முன்னிலையி லேயே கேட்டார். சுவாமிகளும் அவர்களுடைய குணம் குற்றங்களையெல்லாம் வெளிப்படையாக அச்சபையின்கண் எடுத்துச் சொன்னர். பெரிய அந்தஸ்திலிருப்பவர்களைப் பற்றி இவ்வாறு வெட்டவெளியாகப் பேசுவது சிலசமயங்

களில் உயிருக்கே ஆபத்தாய் முடியுமென்று சுவாமிகளைத் தனியாக அழைத்து அரசர் சிறிது கவலையுடன் தெரிவித்தார். அதற்கு அருளாளர், "முகஸ்துதி பண்ணுவது சந்நியாசியுடைய செயல் அல்ல. வேந்தே உமது ஒழுக்கத்தைப் பற்றி என் அபிப்பிராயம் யாதென்று உமது குமாரர் கேட்பாராகில் நான் உண்மையைத்தான் உரைப்பேன். உயிரையும் பொருட்படுத்தாது சத்தியம் பேச வேண்டியது சந்நியாசியின் கடமை. மேலும் தங்கள் சமஸ்தானம் தர்மநெறிக்குட்பட்டு சீர்திருந்தவேண்டுமென்பது எனது நோக்கம்." என்றார்.

சுமார் இரண்டு மாதம் மைசூரிலிருந்துவிட்டு சுவாமிகள் கேரளத்துக்குப் புறப்பட்டார். அப்படிப் புறப்படுவதற்கு முன்பு மைசூர் மஹாராஜா தமக்குகந்த விருப்பமொன்றைத் தெரிவித்தார். அமெரிக்காவில் அதிவிரைவில் சர்வமத மஹாசபையொன்று நடைபெறப்போகிறதென்றும் அதற்கு சுவாமிகள் விஜயம் செய்யவேண்டுமென்றும், தாம் அதற்குவேண்டிய அளவு பொருளுதவி புரிய ஆயத்தமாயிருப்பதாயும் அவர் தெரிவித்தார். ஈஸ்வர சங்கற்பப்படியாகுக என்று சுவாமிகள் வெளியேகினர். கொச்சியிலும் திருவனந்தபுரத்திலும் வழக்கம்போலப் பல அறிஞர்களுக்கு சுவாமிகள் அறிமுகமானார். திருவாங்கூர் மலைநாட்டின் வனப்பைக் கண்டு சுவாமிகள் பேருவகை கொண்டார்.

ஆணவ அகங்காரம் உடையவர்களை அதட்டிப் புத்தி புகட்டவல்ல ஆற்றலும் ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள்

மிகப்படைத்திருந்தார். ஒருநாள் பிரபு ஒருவர் ரயிலில் இரண்டாம் வகுப்பு வண்டிக்கு இவருக்குச் சீட்டு வாங்கிக் கொடுத்திருந்தார். பெட்டி படுக்கையின்றி, உணவின்றி, இவர் இரண்டாம் வகுப்பு வண்டியிலே பிரயாணம் பண்ணினது அவ்வண்டியிலே பிரயாணம் செய்த இரண்டு ஆங்கிலேயர்களுக்கு வியப்பூட்டியது. இரந்துண்ணும் பக்கிரி ஒருவனுக்குத் தாங்கள் பேசும் இங்கிலீஷ் பாஷை எவ்வாறு தெரியுமென்றெண்ணி, அவர்கள் சுவாமிகளைக் குறித்துப் பரிகாசமாய்ப்பேசிக் காலம் போக்குவாராயினர். சுவாமிகளும் ஒன்றும் தெரியாதவர்போல் அமைதியாகவே அமர்ந்திருந்தார். நெடுந்தூரம் சென்றபின், ஓரிடத்தில் வண்டி நின்றபோது, பருக நல்ல ஜலம் எங்கு அகப்படுமென்று ஸ்டேஷன்மாஸ்டர் ஒருவரை சுவாமிகள் ஆங்கிலத்தில் வினவினர். உடன் சென்ற வெள்ளைக்காரர்கள் இருவரும் வியப்படைந்து, “ஓ, உமக்கு ஆங்கிலம் தெரிகிறதே! நாங்கள் பகடி பண்ணினதை நீர் ஏன் நிராகரிக்கவில்லை?” என்று கேட்டார்கள். “அன்பர்களே, நான் மூர்க்கர்களைக் காண்பது இதுவல்ல முதல் தடவை!” என்று சுவாமிகள் மறுமொழி விடுத்தார். அதைக் கேட்டதும் வெள்ளைக்காரர்களுக்குக் கோபம் மூண்டு விட்டது. இவரைத் தாக்கி வருத்தவேண்டுமென்று அவர்கள் சினந்து முன் வந்தார்கள். “ஓகோ! ஒழுக்கம் தவறி நடந்துகொண்டதுமல்லாமல் தேக வலிமையால் உங்களது மேன்மையைச் சாதிக்க வருகின்றீர்களோ? நல்லது, வாருங்கள், அதற்கும் ஆயத்தம்!” என்று சொல்லிக் கொண்டே சட்டை விளிம்பைச் சுருட்டிக் கொண்டு மற்போருக்குத் தயாரானர். பக்கிரியின் முகத்

தில் திகழ்ந்த தைரியத்தையும் புஜங்களில் துடித்த வலிமையையும் காணலுற்ற எதிரிகள் இந்த மனிதனோடு முரண்டுவது அபாயமென்றெண்ணி மெதுவாகப் பின் வாங்கி விட்டார்கள். சுத்த வீரனே தான் அஹிம்சா தர்மத்தையும், காருண்யத்தையும் கையாள வல்லவனென்று சுவாமிகள் புகட்டியது இந்நிகழ்ச்சியால் அறிதற்பாலது.

பாரதத்தாயின் திருவடியெனத் திகழும் கன்னியா குமரிக்குச் சுவாமிகள் எழுந்தருளினர். இங்கே அவர் மனத்தகத்தே எழுந்த உயர்ந்த எண்ணங்கள் எண்ணிக் கையில் அடங்கா. வடக்கே இரண்டாயிரம் மைல்களுக்கப் பாலுள்ள பத்ரிகாசிரமத்திலிருந்து தென் கோடியிலிருக்கும் குமரிமுனை பரியந்தம் உள்ள பிரதேசம் அனைத்தும் சேர்ந்து ஒரே புண்ணிய பூமியாகிறது என்று அவருக்கு விளங்கிற்று. பல்தவிதமான பாங்குள்ள ஜனங்கள், வெவ்வேறு பாஷைகள், கணக்கற்ற பழக்கவழக்கங்கள் ஆகிய இவையாவும் அவர் மனக்கண்ணில் தோன்றின. அத்தனை வேறுபாடுகளுக்கிடையில் உள்ள ஒற்றுமையும் அவருக்குப் புலப்பட்டது. பல்லாயிரம் ஆண்டுகளாகப் பாரமார்த்திகம் ஒன்றே இந்நாட்டின் உயர் லக்ஷியமாய் இருந்து வந்திருக்கிறது. தர்மம் ஒன்றே இப்புண்ணிய பூமியின் உயிர்நாடி. அது தழைத்தோங்கிய காலங்களில் எல்லாம் தேசத்தில் மேன்மைகளனைத்தும் மிளிர்ந்திருந்தன. அறம் குறையவே கேடுகள் பல வந்துள்ளன. மேல்நாட்டு நாகரிகத்திலுள்ள குணங்களை மட்டும் எடுத்துக்கொண்டு குற்றங்களையெல்லாம் அறவே களைய

வேண்டும். அதன் பொருட்டு சுவாமிகள் தாமே மேல் நாட்டுக்குச்சென்று அங்கிருந்த மேதாவிகளுக்குச் சனாதன தர்மத்தின் மேன்மைகளை எடுத்துப் புகட்டவேண்டும். பிறகுதான் இந்தியாவும் ஒழுங்குப்படும்; இவ்வாறெல்லாம் சுவாமிகள் சிந்திப்பாராயினர். அண்டங்கள் அனைத்தையும் ஈன்றெடுத்தான பின்னரும் கன்னியெனக் குமரிமுனையில் எழுந்தருளியிருக்கும் அன்னை ஜெகன்மாதாவை வழுத்தி வணங்கி விட்டு சுவாமிகள் சென்னையை நோக்கிப் புறப்பட்டார்.

வழியில் மதுரை, இராமனாதபுரம், இராமேஸ்வரம், புதுச்சேரி முதலிய இடங்களுக்குச் சுவாமிகள் சென்றிருந்தார். இராமனாதபுரத்தில் இராஜா பாஸ்கர சேதுபதியுடன் நெருங்கிய நட்பு ஏற்பட்டது. சுவாமிகள் அமெரிக்காவுக்குப்போக அவரும் வேண்டிய உதவிகள் புரிவதாகச் சொன்னார். இராமேஸ்வரத்தை தக்ஷிண காசியென்று பகர்வது பொருந்துமென்றும் சுவாமிகள் அபிப்பிராயப்பட்டார். சென்னையைப் போய்ச்சேர்வதற்கு முன்பே பேரறிவுடைய பெரியாரொருவர் வருகிறார் என்ற செய்தி ஆங்கு எட்டியது. அவர் சென்னைக்கு வந்தான பிறகு ஆங்கிலம் பேசுகிற சுவாமிகள் ஒருவர் பட்டணத்திலே பிரவேசமாயிருக்கிறார் என்ற விபரம் ஊர் எங்கும் அதிவேகமாய்ப் பரவிற்று. கல்லூரிகளினின்று மாணவர்களும் ஆசிரியர்களும் பெருங் கூட்டமாக அவரைக்காணச் சென்றார்கள். விதவிதமான விஷயங்களைப் பற்றிய பேச்சுக்கள் அவர்களுக்கிடையே நிகழ்ந்தன. சுவாமிகள்

கல்வியில் கரைகாண முடியாத ஒரு சமுத்திரம் என்று எல்லோரும் ஒருங்கே முடிவு கட்டினார்கள்.

அமெரிக்காவில் கூடுதற்கிருந்த சர்வமதமஹாசபைக்கு இந்து மதத்தின் பிரதிநிதியாகப் போகத்தகுந்தவர் நம் சுவாமிகள் தான் என்று சென்னைவாசிகளுள் பலர் தீர்மானித்தார்கள். அவர்களது வேண்டுதலுக்கு இணங்கினவராகச் சுவாமிகள் ஏற்கனவே கொண்டிருந்த அக் கருத்தை ஸ்திரப்படுத்தினார். ஊக்கம் ததும்பிய மாணாக்கர்கள் வீடு வீடாய்ச்சென்று அவரது பிரயாணத்துக்கு வேண்டிய நிதியை வசூலித்துக்கொண்டு வந்து சேர்த்தார்கள். இதுவரையில் பணத்தைக் கையாளாதிருந்த சுவாமிகள் இனி வெளிநாடு போவதன் நிமித்தம் அதைக் கையாண்டாக வேண்டுமே என்று ஏங்கியிருந்தார். 'எல்லாம் இறைவனுடைய திருவுளப் பாங்கின்படி ஆகுக' என்று அவர் அந்த ஏற்பாடுகளுக்கிடையில் அமைதியுற்றிருந்தார்.

---

## பதினோராம் அத்தியாயம்

## திரைகடல் தாண்டுதல்

அமெரிக்காவுக்குப்போக சுவாமிகள் இசைந்தானதும் அதற்கு வேண்டிய நிதியும் விரைவில் சேகரிக்கப்பட்டது. பம்பாயினின்று அவர் கப்பல் ஏறவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. ஆங்கு அவரை வழியனுப்புவதற்காக அவரோடு இரண்டு சிஷ்யர்கள் அங்ககர் போய்ச் சேர்ந்

தார்கள். தமது உடலையே ஒரு சுமையாக எண்ணியிருந்த சுவாமிகளுக்கு இப்பொழுது மூட்டை, முடிச்சு, பெட்டி, படுக்கை முதலியன தயாரிக்கப்பட்டன. போகபூமியிலிருப்பவர்களுக்கு யோகத்தைப்பற்றிய செய்தியைச் சொல்ல வேண்டியிருந்தமையால் சுவாமிகள் இத்தகைய வெளிப் பகட்டுகளுக்கு உட்படவேண்டியதாயிற்று. கடைசியாக புறப்படும் நாளும் வந்தது. 1893ம் ஆண்டு மே மாதம் 31ம் தேதியன்று கடவுளின் திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு 'பெனின்சுலார்' என்று பேர்படைத்திருந்த கப்பலேறி சுவாமிகள் கடலினுள் பிரவேசித்தார்.

பரந்த கடலிலே மிதந்து போனபொழுது உயர்ந்த எண்ணங்கள் பல சுவாமிகள் உள்ளத்திலே உதிக்கலாயின. இயற்கையின் வன்மையையும் வனப்பையும் கண்டு அவர் களிப்புற்றிருந்தார். கொழும்பு, பினங்கு, சிங்கப்பூர் முதலிய துறைமுகங்களில் கப்பல் தங்கி நின்றபோது அவ் வூர்களையும் அவர் விரைந்துசென்று பார்த்து வந்தார். சீனத்திலே ஹாங்காங் என்னுமிடத்தில் கப்பலானது மூன்று நாளைக்கு நின்றது. அதற்குள்ளாக உள்நாட்டில் இருந்த பௌத்த மடாலயமொன்றைப் பார்த்துவரலா மென்று சுவாமிகளும் அவருடன் பிரயாணம்செய்த ஜெர் மானியர் சிலரும் புறப்பட்டார்கள். ஆலயத்தின் அருகில் செல்ல வெளிநாட்டார் யாருக்கும் அனுமதியில்லை என்ற தடை வந்தது. ஆயினும் இவர்கள் கோயிலை அணுகி னார்கள். எதிர்பார்த்தவண்ணம் சீனர்களும் கோபாவேசத் துடன் திடீரென்று தடிகளைத் தூக்கிக்கொண்டு தாக்கு தற்கு ஓடிவந்தார்கள். அதைக்கண்டதும் பிரயாணிகள்

எல்லாரும் ஓட்டம் பிடித்துவிட்டார்கள். சுவாமிகள் மட்டும் சாந்தமாக நின்றுகொண்டு ஆசீர்வதிப்பவர் போன்று வலது கரத்தை உயர்த்திக்கொண்டு "ஹிந்து யோகி, ஹிந்துயோகி" என்றார். யோகி என்ற பதம் அக்கணமே அவர்களது முகக்குறியை அறவேமாற்றிவிட்டது. சீனர்கள் நம் சுவாமிகளின் திருவடிகளில் விழுந்து நமஸ்கரித்துவிட்டு கோயிலினுள்ளும் அழைத்துச் சென்றார்கள். அங்கிருந்த யாவற்றையும் அவர்கள் அவருக்கு அன்புடன் காட்டி வைத்தார்கள். சமஸ்கிருத நூல்கள் பல பழைய ஏடுகளில் எழுதி வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்த சுவாமிகள் ஆச்சரியப்பட்டார். இந்தியாவிலின்று பரவிய புத்த மதந்தான் இதற்கெல்லாம் காரணமென்று அவர் கருதினர்.

சீனர்களுடைய பழக்கவழக்கங்கள் சிலவற்றை சுவாமிகள் மிகவும் பாராட்டிப் புகழ்ந்தார். அவர்கள் ஓயாது உழைத்து வேலை செய்ததும் மெய்வருந்தப் பாடுபட்டுப் பொருள்சம்பாதித்ததும் சுவாமிகளுக்குப் பரமதிருப்தியை உண்டுபண்ணின. சோம்பலாய்த் தேம்பித்திரியும் லக்ஷக்கணக்கான இந்தியர்களும் இவர்கள் போன்று மனமுவந்து பாடுபட்டாலொழிய நாட்டினுள் தாண்டவமாடும் தரித்திரம் தொலையாதென்று அவர் எண்ணினர். பிறகு பெனின்சுலார் கப்பலானது ஜப்பான் தேசத்துக்குப் போயிற்று. அழகும், ஆக்கமும், ஊக்கமும் வாய்க்கப் பெற்று அதிவேகமாய் முன்னேற்றம் அடைந்துவந்த அந்நாட்டைப் பார்த்துவிட்டுச் சுவாமிகள் பரந்த பசிபிக் மஹா சமுத்திரத்தைக் கடந்து அமெரிக்கா போய்ச் சேர்ந்தார்.

மேற்குக்கரையில் வான்கூவர் என்ற துறைமுகத்தில் கப்பலிலிருந்து சுவாமிகள் இறங்கினர். தொடர்ந்துமூன்று நாள் ரயிலில் பிரயாணம்செய்து சிகாகோ நகர் போய்ச் சேர்ந்தார். சர்வமதமஹாசபை நிகழ்தற்கு இன்னும் ஏழு வாரங்கள் இருந்தன. அதுபரியந்தம் அந்நாட்டில் சும்மா தங்கியிருப்பது பெரும்செலவுக்கு ஏதுவாகும் என்பதை அவர் அறிந்தார். மற்றொரு பெரிய இடுக்கண் அவரை எதிர்த்து நின்றது. தாம் எண்ணிவந்த காரியம்மட்டும் நிறைவேறாதுபோல் தோன்றிற்று. சும்மா வருகின்ற வர்களையெல்லாம் சர்வமத மஹாசபையில் பேச்சாளர்க ளாக எடுத்துக்கொள்ளமாட்டார்கள். எந்த நாட்டில் எந்த மதத்தின் பிரதிநிதியாக ஒருவர் வருகிறாரோ அவர் அந் நாட்டு சமூகங்களிடத்திருந்தும் அதிகார வர்க்கங்களிடத் திருந்தும் அதிகாரப்பத்திரம் வாங்கிவரவேண்டும். அம் முறை யொன்றையும் சுவாமிகள் அறிந்திலர்.

இந்தியாவிலிருந்து இன்னும் கொஞ்சம் பணம் வர வழைத்து அங்கேயே திரும்பிப்போம் பரியந்தம் அமெரிக் காவில் சிக்கனமான வாழ்வு நடத்த வேண்டுமென்று அவர் தீர்மானித்தார். அதன்படி அவர் சிகாகோ நகரத்தினின்று நாட்டுப்புற வாழ்க்கைக்குப் போய்விட்டார். பாஸ்டன் என்ற இடத்தில் கிராமத்துப் பக்கம் அவர் வசித்து வந் தார். அப்பொழுது அவரை வேடிக்கை பார்க்க விதவித மான பாங்குடையவர்கள் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களுடைய விபரீதமான கேள்விகளுக்கெல்லாம் சுவாமிகள் பொறுமையுடன் நல்ல பதிலளித்து வந்தார். அப்படி அவரைப் பார்க்க வந்தவர்களுள் அமெரிக்கா

வெங்கும் பெயர் பெற்றிருந்த ஆசிரியர் ஜே. எச். ரைட் என்பாரும் ஒருவர். சுவாமிகளுடன் சிறிதுநேரம் அவர் உரையாடினர். அவரது மஹிமையை அந்த ஆசிரியர் அதிவிரைவில் அறிந்துகொண்டார். "பெரியோய்! சர்வ மதமஹாசபையில் ஹிந்துமதத்தைப்பற்றி நீவிர் அவசியம் உபந்யாசம் செய்யவேண்டும்." என்றார் அவர். ஆனால் தமக்கு ஏற்பட்டிருந்த இடைஞ்சல்களையெல்லாம் சுவாமிகள் எடுத்தோதினர். அதிகாரப்பத்திரம் எதுவும் தம்மிடம் இல்லையென்று அவர் இயம்பினர். அதிகாரப் பத்திரம் வேண்டுமென்று சுவாமிகள்போன்ற ஒருவரிடம் கேட்பது சூரியனைப்பார்த்து, "பிரகாசிக்க உனக்கு அதிகாரம் தந்தது யார்?" என்று வினவுவதற்கு ஒப்பாகும் என ஆசிரியர் கருதினர்.

சர்வமதமஹாசபையை நிர்மாணித்த பெரியவர்களுக்கிடையில் ஆசிரியர் ஜே. எச். ரைட் அவர்களுக்கு அதிக செல்வாக்கு இருந்தது. அவர் சுவாமிகளுக்கு சிபார்சுக் கடிதம் ஒன்று கொடுத்து சிகாகோ நகருக்கு அனுப்பி வைத்தார். அக்கடிதத்தில் அவர் வரைந்திருந்த பல அடைமொழிகளுக்கிடையில், "நமது ஆசிரியர்களெல்லாரும் ஒன்றுதிரண்டு நின்றாலும் கல்வியில் இப்பெரியாருக்கு ஒப்பாகமாட்டார்கள்" என்பதும் ஒன்று. சுவாமிகள் கையில் போதிய அளவு பணமில்லாதிருந்தது. ஆகையால் ஆசிரியர் தாமே ரயில்வண்டிச் சத்தமும் கொடுத்தனுப்பினர். சுவாமிகள் சிகாகோவுக்கு வந்து சேர்ந்தது இரவுநேரம். விதிவசத்தால் தாம்போய்ச் சேர

வேண்டிய இடத்தின் விலாசத்தை வழியில் அவர் இழந்துவிட்டார். பிரயாணத்தில் மிகக் களைத்துப் போயிருந்த சுவாமிகள் எல்லாம் காலையில் பார்த்துக் கொள்ளலாமென்று எண்ணி இருப்புப்பாதை வண்டி நிலையத்திலேயே இராத்தங்கிவிட்டார். இன்னும் சொற்ப நாளில் அமெரிக்காவையே அடியோடு ஆட்டிவைப்பதற் கிருந்தவர் இப்போது திக்கற்றவராய் ஒரு நீண்ட பெட்டியின்மீது படுத்துக்கிடந்தார். மறுநாட்காலையில் தாம்போய்ச் சேரவேண்டிய இடத்தை சிரமப்பட்டுக் கண்டுபிடித்தார். அந்தமஹாசபை நிர்வாகிகளும் சிபார்சுக் கடிதத்தைப் பார்த்ததும் இவரையும் ஓர் உபந்நியாசகராக ஏற்றுக்கொண்டார்கள். பின்பு இடவசதி, போஜனவசதி முதலியன இவருக்கு இயல்பாக வந்தமைந்தன. கவலைகளையெல்லாம் ஒழித்துவிட்டு கடவுளையும், தம் குருநாதரையும் மனமார வழுத்தி, நிஷ்டைபுரிந்து அவர் அங்கு வதிந்திருந்தார். பெருங்கூட்டத்தின் முன் எழுந்து நின்று சொற்பொழிவாற்றுதற்கேற்ற வல்லமையை தமக்கு நல்குமாறு பிரார்த்தனைகள் செய்தும் அவர் ஏனைய நாட்களைப் போக்கிவந்தார்.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்

### சர்வமத மகாசபை

உலகிலுள்ள எல்லா சமயங்களையும் சீர்தூக்கிப் பார்ப்பதற்கென்று இது அமைக்கப்பெற்றது. அதற்காக எல்லாநாடுகளிலிருந்தும் அந்தந்த சமயங்களுக்குரிய பிரதி

நிதிகள் வரவழைக்கப்பட்டிருந்தனர். மக்களுக்கிடையில் ஒற்றுமையை உண்டுபண்ணுதற்கும் ஒருவர் கருத்தை ஒருவர் அறிந்துகொள்ளுதற்கும் இச்சபை பெரிதும் உதவியது. ஆதலால் உலக சரித்திரத்திலேயே இது ஒரு சிறந்த நிகழ்ச்சியெனக் குறிப்பிடலாம். 1893ம் ஆண்டு செப்டம்பர் மாதம் பதினோராம் தேதி காலை பத்து மணிக்கு இம்மஹாசபை துவங்கிற்று. மங்களவாத்தியங்களின் ஆரவாரங்களுக்கிடையிலும், மணியோசையின் எதிரொலிகளுக்கிடையிலும் தெள்ளி எடுக்கப்பட்ட உபந்நியாசகர்கள் மேடையின் மீது அணியணியாய் அழைத்துச் செல்லப்பட்டனர். வெவ்வேறு மதங்களின் சிறப்புக்களைக் கேட்டறிய விரும்பிய பேரறிஞர்கள் சுமார் பத்தாயிரம்பேர் 'கொலம்பியன் ஹால்' என்ற மண்டபத்தினுள் கூடியிருந்தனர்.

அவைத் தலைவரானவர் அந்த மகாசபையின் உயர் நோக்கத்தைப் பற்றி அழகிய முன்னுரையொன்று பகர்ந்தான பின்பு, உபந்நியாசகர்களை ஒருவர்பின் ஒருவராகச் சபைக்கு அறிமுகம் செய்துவைத்தார். தமது முறையும் அணுகி வருவதை அறிந்த ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் சிறிது அஞ்சினர். உடல் துடிதுடித்தது; நாவுலர்ந்தது; பெரியசபையின்கண் இதற்குமுன் அவர் எப்போதும் பேசினதில்லை. இந்தத் திருக்கூட்டமோ வெனின், தேர்ச்சி பெற்ற பிரசங்கிகளையும் திகைத்திடச் செய்ய வல்லது. முடிவாக, சுவாமிகளும் சபையின் முன் அழைக்கப்பட்டார். அப்போது அவர் அம்பாள் சரஸ்வதியையும் தமது குருநாதரையும் நினைந்து, பரவசமடைந்து

விட்டார். அவரது முகம் அப்போது ஞானவொளி வீசிப் பிரகாசித்தது. துலங்கும் சூரியன்போல் கண்கள் ஜ்வலித்தன. ரிஷி புங்கவரின் தவ வலிமை ஈண்டு திகழலாயிற்று. ஆசனத்தினின்று எழுந்திருந்து மேடையின்முன் வந்து நின்ற மகிமையே சபையோரது உள்ளத்தை ஒருவாறு கவர்ந்துவிட்டது. கம்பீர த்வனியிலே, "அமெரிக்க நாட்டுச் சகோதரி சகோதரர்களே!" என்றார். மேலும் அவரைப் பேசவொட்டாது தடுத்து, இடியிடித்தாற் போலக் கரகோஷம் முழங்கிற்று. காரணம் வேறொன்றுமில்லை. மற்ற உபன்யாசகர்கள் எல்லாம் "சீமாட்டிகளே! சீமான்களே!" என்று சபையோரை விளித்துத் தத்தம் உபன்யாசங்களைத் தொடங்கினர். ஆனால் உலகனைத்தையும் ஒரே குடும்பமாகப் பாராட்டினவர் இந்த ஹிந்து சந்நியாசி ஒருவரேயாவர்! சர்வமத மகாசபையின் நோக்கத்தையும் அக்கணத்திலேயே அவர் பூர்த்தி பண்ணி வைத்தவரானார். அமெரிக்கா தேசத்தையும் அந்த இரண்டு வார்த்தைகளைக் கொண்டே அவர் வென்று விட்டார். ஆ! அன்பின் மகிமையை என்னென்பது!

ஒரேநாளில் சுவாமிகளின் கீர்த்தி நாடெங்கும் பரவி விட்டது. சமாசாரப்பத்திரிகைகள் இவரைப் புகழ்ந்து பாராட்டியதற்கு முடிவில்லை. சர்வமதமஹாசபையில் இவருக்கு ஒப்பானவர் வேறு எவரும் இல்லையென்றே எல்லாரும் ஏகமனதாய்த் தெரிவித்தார்கள். மஹாசபை நடந்து வந்த நாட்களில் உபன்யாசகர்கள் எல்லாரும் பேசியான பின்பு விவேகானந்தசுவாமிகள் முடிவுரையாக

ஏதாவது பேசுவார் என்ருல் மட்டும் ஜனங்கள் மண்டபத்தில் நெடுநேரம் அமைதியாகக் காத்திருப்பார்கள். வீதிகளில் முக்கிய இடங்களில் இவரது திருவுருவப்படங்கள் தென்பட்டன. எண்ணிறந்த ஜனங்கள் இவரைத்தரிசிப்பதற்காக வந்து சூழ்ந்தார்கள். இவ்வளவு பெருமிதமான பேரும் புகழும் சாமானிய மனிதனொருவனை வரம்புகடந்த நிலைக்குச் செலுத்தி அழியுமாறு செய்திருக்கும். ஆனல் உலக அந்தஸ்து எதிலும் வேண்டுதல் வேண்டாமை இல்லாத சுவாமிகள் அவைகளை யெல்லாம் பொருட்படுத்தவில்லை.

சர்வமதமஹாசபை முடிந்த பின்பு ஒரு பிரபுவின் மாளிகையில் இவர் விருந்தினராக அமர்ந்திருக்க நேர்ந்தது. விலையுயர்ந்த வில்கட்டிலின்மீது மெல்லிய பஞ்சு அணைத்த பட்டுமெத்தை விரிக்கப்பட்டிருந்தது. இதையெல்லாம் காணலுற்ற சுவாமிகள் பெரும் துயரத்துக்கு ஆளானுர்கள். இரவெல்லாம் உறங்காது தரையில் படுத்துக் கொண்டு இந்தியாவின் வறுமையை எண்ணியெண்ணி கசிந்துருகி அழுதார். 'பசிப்பிணியைத் துடைக்க இயலாதவர்களாய் ஆங்கு ஆயிரக்கணக்கானபேர் அலைந்து மடிகின்றனர். இங்கு பெருமிதமான பொருள்களுக்கிடையில் மக்கள் போகத்தில் மகிழ்ந்து கிடக்கின்றனர். க்ஷீணதசையிலிருக்கும் இந்தியாவானது நாளடைவில் கீழ்நோக்கியே போய்க்கொண்டிருக்கிறது. வறுமைவாய்ப்பட்டிருக்கும் பரதநாடு பழம்பெருமையை மீண்டும் பெறுவது எங்ஙனம்?" இவைபோன்ற எண்ணங்கள் அவருடைய மனதை இரவெல்லாம் வாட்டிக்கொண்டிருந்தன.

அமெரிக்காவிலே சுவாமிகள் பெற்றிருந்த கீர்த்தி யைக்கண்டு சகிக்க இயலாத கூட்டம் ஒன்று இருந்தது. அவர்கள் கொண்ட பொறுமைக்கு ஓர் அளவில்லை. எவ் விதத்திலாவது இவரைப் பின்னணிக்குத் தள்ளிவிட வேண்டுமென்று அவர்கள் முயன்றார்கள். "இந்தியாவில் அந்தஸ்து எதுவுமில்லாத ஒரு வெறும் ஆண்டி இவன்" என்று பலருக்கு அப்பொறுமைக்காரர்கள் எடுத்தோ தினார்கள். இவர் சென்றவிடங்களிலெல்லாம் இவரைப் பற்றி ஈனவதந்திகள் பல பரப்பினர். பத்திரிகைகளில் பொய்யும் புளுகும் வேண்டிய அளவு இவரைப்பற்றி எழுதப்பட்டன. அவர்களுடைய அடாதசெயலால் இவ ரது பரிசுத்தவாழ்க்கைக்குப் பல சோதனைகள் அமெரிக்கா வில் ஏற்பட்டன. அத்தகைய சூழ்ச்சிகளெல்லாம் முடிவில் சுவாமிகளின் மகிமையைப் பன்மடங்கு அதிகப்படுத்து தற்கே உதவின. தூய்மையே வடிவெடுத்திருந்த துறவி வேந்தர் சத்தியவழியில் நின்று சத்தியத்தைப் புகட்டி வந்தார்.

பல பட்டணங்களுக்கும் நகரங்களுக்கும் சென்று தர்மப்பிரசாரம் செய்தது சுவாமிகளுக்கேற்பட்ட அரும் பணியாகும். சிலநாட்களில் இரண்டு மூன்று இடங் களிலே தொடர்ந்து பிரசங்கங்கள் செய்யவேண்டி நேரிடும். சுவாமிகளும் ஆங்காங்குச் சென்று தூயமன முடையவர்களிடத்து ஞானவிளக்கேற்றி வந்தார். அக் காலத்தில் அவர்பெற்றிருந்த மகிமையொன்று குறிப்பிடத் தகுந்தது. அரும்பெரும் விஷயங்கள் பலவற்றை எடுத் துக்கூறிமுடித்த பின்பு நாளை எதைப்பற்றிப் போதிப்பது

என்று எண்ணிக்கொண்டு அவர் படுத்துறங்குவார். பிள்ளைப்பருவத்திலிருந்து அவருக்கு ஏற்பட்டிருந்த யோக நித்திரையில் அவர் மூழ்கி இருப்பார். அவ்வேளையில் தாம் முன்னர் எப்பொழுதும் கேட்டிராத விஷயங்கள் அவர் மனதில் பாயும். பழைய கருத்துக்கள் புதிய விளக்கத்துடன் அவர் மனக்கண்ணில் தோன்றும். இவைகளையெல்லாம் யாரோ உரக்க எடுத்துக் கூறுகின்ற சப்தமும் அவரது செவியில் விழும். தாம் இரவில் கேட்டறிந்த விஷயங்களை மறுநாள் தெளிவுபட மக்களுக்கு எடுத்து விளக்குவார். முன்னுளிலே வேதங்களை இயற்றிய ரிஷிகள் இது போன்ற ஆதேசம் பெற்றிருக்கலாமென்று அவர் யூகித்தார்.

யோக சாதனத்தில் சம்பூரணமடைந்த மனிதன் ஒருவன் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பரம சாந்தமாக இருக்க முடியுமென்று சுவாமிகள் ஒருநாள் வலியுறுத்திப் பேசினார். இவரது கூற்றுக்கும் செய்கைக்குமிடையே உள்ள சம்பந்தத்தைப் பரீக்ஷிக்க விரும்பின மாணுக்கர்கள் சிலர், இவர் ஒரு மேடையின் மீது நின்று பிரசங்கம் செய்து கொண்டிருக்கையில், இவரைச் சுற்றிலும் கைத் துப்பாக்கியால் சுட்டார்கள். இடி விழுந்தாற் போல வெடித்த சத்தங்களையும், தமது உடலோரம் சீறிக் கொண்டு போன குண்டுகளையும், சிறிதேனும் பொருட் படுத்தாது சுவாமிகள் தொடர்ந்து பேசிக்கொண்டே போனார்! வியப்புற்ற வாலிபர்கள் இவரது கூற்றை முற்றும் மெய்யென்று நம்பினதுமல்லாது, இவர் தாமே ஒரு பெரிய யோகியென்பதையும் உணர்ந்தனர்.

ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் வெளிநாட்டில் எய்திவந்த வெற்றியின் செய்தியானது வெகுதூரத்துக்கு அப்பால் இருந்த தாய்நாட்டுக்கும் எட்டிற்று. இந்தியாவில் பிரசுரமாகி வந்த பத்திரிகைகள் பிரபல்யமாக அவரைப்புகழ்ந்து எழுதலாயின. இந்தியர்கள் உள்ளத்திலே பெருங் கிளர்ச்சியொன்று எழலாயிற்று. சர்வமத மகாசபையில் ஜய பேரிகை கொட்டிய தங்களது இளம் வீரரைப்பற்றியும், பரதகண்டத்தின் மகிமையைப்பற்றியும், இந்து மதத்தைப்பற்றியும் அவர்கள் பெருமை பாராட்டினார்கள். சுவாமிகளைப்பற்றிய பேச்சு ஒன்றே நாடெங்கும் மக்களது நாவில் குடியிருந்தது. அவ்வேதாந்தகேசரியை வாழ்த்துதற்கும், அவரை அன்புடன் வரவேற்ற அமெரிக்காவுக்கு ஆசிமொழி கூறியனுப்புதற்கும் சென்னை, கல்கத்தா போன்ற பெரிய நகரங்களில் மகாநாடுகள் பல கூடின.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்

## மேல்நாட்டு சிஷ்யர்கள்

ஊர் ஊராகச் சென்று வெறும் வேதாந்தப் பிரசாரம் செய்தலில் சுவாமிகள் திருப்தியடையவில்லை. அது நிலைத்த பயன் தராது என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. வேதாந்த தத்துவங்களுக்கேற்ப பெருவாழ்வு வாழவல்ல உத்தமர்களைத் தெரிந்தெடுக்க வேண்டும். அவர்களுக்கு

ஆத்மசாதனப் பயிற்சி தரவேண்டும். நல்லாரது நல்வாழ்வின் மூலமாகவே வேதாந்தக் கோட்பாடுகள் வையகத்தில் பாதுகாத்து வைக்கப்படுகின்றன. அத்தகைய நன்மக்களை ஆயத்தப்படுத்துவதில் அவர் கண்ணும் கருத்துமாயிருந்தார். தம்மை வந்து அணுகிய சிஷ்யர்களை ஒன்று திரட்டி வைத்துக்கொண்டு பழய காலத்து ரிஷிகள் கையாண்டு வந்த முறையிலே ஒரு மரத்தடியிலோ அல்லது ஒரு வசதியான வேறு ஏதேனும் இடத்திலோ தரையின் மீதமர்ந்து அவர்களுக்கு அன்புடன் வேதாந்தப்பாடம் புகட்டிவந்தார். தியானம், யோகப்பயிற்சி இத்யாதி அனுஷ்டானங்களையெல்லாம் சிஷ்யர்கள் கற்று உணரலானார்கள்.

சுவாமிகள் ஐரோப்பாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையிடையே போய் வந்தார். இங்கிலாந்தில் அவர் வசித்திருந்தபொழுது பேரறிஞர் பலர் அவரை அணுகினார்கள். இப்பொழுது நமக்கு உரியதாயிருக்கும் ஞான யோகம் என்ற அரிய நூலில் பெரும் பகுதி லண்டன் நகரில் புகட்டிய உபந்நியாசங்களின் உட்கருத்தாகும். அக்காலத்தில் இங்கிலாந்து பேராதிக்கத்துடன் இந்தியாவை ஆண்டு வந்தது. அடிமைப்பட்ட ஒரு நாட்டு மக்களில் ஒருவரை ஞானகுருவாக ஏற்றுக்கொள்வது ஆட்சிச் செருக்குடையவர்களுக்கு ஆகக்கூடிய காரியமல்ல. ஆயினும் விவேகாநந்த சுவாமிகளை ஆங்கிலேயப் பேரறிஞர் சிலர் குருவாக ஏற்றுக்கொண்டது அவர்களுடைய மன பரிபாகத்துக்கு அறிகுறியாகும். சுவாமிகளும் ஆங்கிலப் பண்பாட்டைப் பெரிதும் பாராட்டினார். உலக முழுதையும் சுற்றிப்

பார்த்தான பிறகு அந்நாளில் ஆங்கிலேயர் பண்பாடுதான் தலைசிறந்திருந்த தென்று சுவாமிகள் பகர்ந்திருக்கிறார். நல்லது என்று ஆங்கிலேயர்க்கு ஏதேனும் ஒன்று தென்படுமானால் அந்த நலத்தின் பொருட்டு தங்கள் வாழ்வையே ஒப்படைக்கவும் அவர்கள் ஆயத்தமாயிருந்தது அவர்களது தனிச் சிறப்பாகும்.

தம்மை வந்து சரணடைந்த சிஷ்யர்களுக்கெல்லாம் சுவாமிகள் மந்திரோபதேசம் செய்து வைத்தார். இரண்டு மூன்று பேருக்கு பிரம்மசரிய ஆஸ்ரமத்துக்கேற்ற சம்ஸ்காரங்களையும் செய்துவைத்தார். அவர் மேல்நாடுகளில் திரட்டி யெடுத்த சந்நியாசிகள் கிருபானந்தர், அபயானந்தர், யோகானந்தர் என்னும் மூவர் ஆவர். கடவுளை அடைதற்காகவும் உலகுக்கு அன்புப்பணி யாற்றுதற்காகவும் வேண்டிப் புலன்களையடக்கிப் பரிசுத்த வாழ்வு வாழவல்ல துறவிகளை மேல்நாடுகளில் தயாரிப்பது எத்தகைய கடினமான காரியமென்பது சொல்லாமலே விளங்கும். ஆனால் அத்தகைய அருஞ்செயல்கள் தான் தமது தெய்வீக இயக்கத்துக்கு அடிப்படையான அஸ்திவாரம் என்பதை சுவாமிகள் நன்கு அறிந்திருந்தார். சுவாமிகளிடம் சரணடைந்தவர்களுள் சேவியர் தம்பதிகள் (Captain sevier and Mrs. sevier) குறிப்பிடத்தக்கவர்கள். லண்டன் நகரில் தங்களுக்குச் சொந்தமாயிருந்த வீடு, வாசல் யாவற்றையும் விற்றுப் பெருநிதி திரட்டி அதைத் தங்களது குருமூர்த்தியிடம் சமர்ப்பித்தார்கள். அவரோடு இந்தியாவுக்குச் செல்லவும் அவர்கள் ஆயத்தமானார்கள். ஹிமாலய பர்வதத்தில் மாயாவதி என்னுமிடத்தில் ஸ்தாபிக்கப்

பெற்றிருக்கும் அத்வைத ஆஸ்ரமம் இவர்களது நிதியைக் கொண்டே ஆனதாம். ஜே. ஜே. குட்வின் (J. J. Goodwin) என்பவர் சுவாமிகளின் மற்றொரு முக்கியமான சிஷ்யர் ஆவார். அல்லும் பகலும் அவர் சுவாமிகளது நிழல் போன்றிருந்து அவருக்குப் பணிவிடைகள் ஆற்றி வந்தார். சுவாமிகளின் உபந்நியாசங்களையெல்லாம் சுருக்கெழுத்தால் (short hand) குறித்து வைத்துப் புஸ்தகங்களாக வெளிவரும்படி செய்து வைத்தவரும் இவரேயாம்.

இவர்களெல்லார்க்கும் மேலாக சகோதரி நிவேதிதையை எடுத்துக்கொள்ளலாம். மார்கரெட் நோபில் (Margaret Noble) என்பது இவளது கன்னித் திருநாமம். லண்டன் நகரில் சிறந்த முறையில் பள்ளிக்கூடமொன்றை இவள் நிர்வகித்து வந்தாள். விவேகாநந்த சுவாமிகளைச் சந்தித்தது அவளுடைய வாழ்க்கையில் அதிசயமான மாறுதலை உண்டுபண்ணிற்று. தனது நுண்ணறிவைக் கொண்டு சுவாமிகளின் தெய்வீகத் தன்மையைத் துருவித் துருவி ஆராய்ந்தாள். அவரது மகிமைகளை எல்லாம் ஒருவாறு உணர்ந்த பின்பே அவரை அவள் குருவாக வணங்கினாள். சுவாமிகளும் தாய்மையே வடிவெடுத்த அப் பெண்பாலை பாரதத்தாயின் திருப்பணிக்காக நிவேதனம் செய்தார். ஆகையால் அவளுக்கு சகோதரி நிவேதிதை என்ற தீக்ஷாநாமம் வந்தமைந்தது. இந்தியாவின் தேசிய இயக்கத்தில் சகோதரி நிவேதிதை எத்தகைய வினையாற்றி வந்தாள் என்பதை இந்திய உலகம் நன்கு அறியும். இவள் இயற்றிய அரிய நூல்கள் இன்றைக்கும் இலக்கிய உலகத்தில் உயர்ந்த ஸ்தானம் வகித்து வருகின்றன. The Master

as I saw Him, The Web of Indian Life, Footfalls of Indian History ஆகிய ஆங்கில நூல்களை வாசிப்பவர்க்கே நிவேதிதை சகோதரி எத்தகைய மாண்புடையவள் என்பது விளங்கும். விவேகாநந்த சுவாமிகளையும் இந்தியாவின் புனிதத்தையும் உள்ளபடி அறிந்துகொள்ள விரும்புபவர்கள் இந்நூல்களைக் கற்றுக வேண்டும்.

பால் தாசன் (Paul Duessen) என்ற மேதாவியொருவர் அக்காலத்தில் ஜெர்மனியில் வாழ்ந்திருந்தார். அவர் சமஸ்கிருதத்தில் பாண்டித்யம் மிகப் படைத்தவர். வேதாந்த சாஸ்திரத்தில் மிகப் பிரியமுடையவர். இந்தியா முழுதும் அவர் சுற்றுப் பிரயாணம் பண்ணியிருக்கிறுர். இந்தியாவின் நாகரிகத்தை அக்காலத்தில் மிகப் போற்றியவர் அவரே. விவேகாநந்த சுவாமிகளைப்பற்றி அவர் பத்திரிகை வாயிலாக கேள்விப்பட்டார். பிறகு தமது இல்லத்துக்கு எழுந்தருள வேண்டுமென்று சுவாமிகளை வேண்டினர். ஐரோப்பாவில் சுற்றுப்பிரயாணம் செய்த பொழுது சுவாமிகளும் அவரது அழைப்புக்கிணங்கி ஆங்குச்சென்றிருந்தார். அதுபோழ்து இருவரும் தங்களது குறிக்கோளாகப் பாராட்டி வந்திருந்த பாரமார்த்திக விஷயங்களைப்பற்றி ஆழ்ந்து ஆராய்ந்து அளவளாவிக் காலங் கழிப்பாராயினர்.

இங்கிலாந்திலே ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலையில் மாக்ஸ் முல்லர் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர் சமஸ்கிருதத்தில் மஹா பண்டிதர். நான்கு வேதங்களையும் நாற்பது வருஷ காலமாக இடையருது ஆராய்ச்சி

பண்ணி ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அச்சியற்றி வெளியிட்ட பெருமை மாக்ஸ்முல்லருக்குண்டு. மேலும் அவர் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைப்பற்றி மிகக் கேள்வி யுற்றிருந்தார். ராமகிருஷ்ணரைப்பற்றி ஒரு சிறு நூலும் அவர் இயற்றி வெளியிட்டிருந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் சிஷ்யராகிய விவேகாநந்த சுவாமிகளைச் சந்திக்க அவரும் ஆவல் கொண்டிருந்தார். இருவரும் சந்திக்கும் காலமும் வந்தமைந்தது. சுவாமிகள் சிலநாள் மாக்ஸ் முல்லருடைய விருந்தினராய் அமர்ந்திருந்தார். கல்வியின் பயனாகிய அடக்கமும், பணிவும், சாந்தமும் மாக்ஸ் முல்லரிடம் சாலத் திகழ்ந்திருந்தன. அவரைச் சந்தித்த நாள் ஒரு திருநாளென்றே சுவாமிகளும் எண்ணி னார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரது சீரிய சிஷ்யரைச் சந்திக்கும் பாக்கியம் தமக்குக் கிட்டியதை மாக்ஸ் முல்லரும் வியந்து பாராட்டினார்.

தமது சிஷ்யர்களோடு சுவாமிகள் இங்கிலாந்தில் வாழ்ந்திருந்தபோது சிறிய நிகழ்ச்சி யொன்று நேர்ந்தது. எந்த சந்தர்ப்பத்திலும் அவருடைய மனப்பாங்கில் தடுமாற்றம் என்பது சிறிதேனும் இல்லை யென்பதை அந் நிகழ்ச்சி சுட்டிக்காட்டும். சுவாமிகளும் அவரோடு ஆடவர் ஒருவரும், மாது ஒருத்தியும் ஆக மூன்று பேர் ஒரு நாள் மாலையில் ஒரு கழனியில் உலாவிக் கொண்டிருந் தார்கள். அப்போது பருத்துத் திமிர் பிடித்த காளைமாடு ஒன்று இவர்களைத் தாக்க வேகமாய்ப் பாய்ந்தோடிவந்தது. அதைக்கண்டதும் உடன் வந்துகொண்டிருந்த ஆண்மகனர் ஓட்டம் பிடித்துவிட்டார். பெண்பாலோ வெனின் பயந்து

மயங்கிக் கீழே விழுந்துவிட்டாள். விரைந்து பாய்ந்து வந்த எருதை எதிர்த்து சுவாமிகள் நின்றுகொண்டிருந்தார். அத் துஷ்ட மிருகம் தம்மைத்தூக்கி வீசினால் தாம் எங்கே போய் விழ நேரிடுமென்று அவர் எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தார்! ஆனால் சுவாமிகளின் முக வசீகரத் தாலோ அல்லது வேறு எக்காரணத்தாலோ அருகில் வந்ததும் காளை அப்படியே பிரமித்து நின்றுவிட்டது.

நாலு வருஷங்கள் மேல் நாடுகளிலே இருந்து சமயப் பேரியக்கம் ஒன்று துவக்கி வைத்த சுவாமிகள் இப்போது தாய் நாட்டிற்குத் திரும்பிப்போக வேண்டியது அவசிய மாயிற்று. எனவே அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் வேதாந்தப் பிரசாரம் செவ்வனே நடைபெறுதற்கான ஏற்பாடுகளையெல்லாம் செய்துவைத்துவிட்டு 1896-ம் ஆண்டின் இறுதியில் அவர் இந்தியாவை நோக்கிப் புறப்பட்டார். அப்போது அவரைவிட்டு விலகியிருக்க ஆற்றாத சிஷ்யர்களுள் ஒருவர் பகர்ந்ததாவன :—"இன்று ஸ்ரீமத் விவேகாநந்த சுவாமிகள் எங்களது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு போய்விட்டார். அவரை விட்டுப் பிரிந்ததும் பேரிருள் போன்ற துயரம் வந்து எங்களது உள்ளத்தைப் பிடித்துக்கொண்டிருக்கிறது. அவரது நட்பைப் பெறுதற்கேற்ற புண்ணியம் எதுவும் நாங்கள் இப் பிறப்பில் செய்ததில்லை. ஒருவேளை அது முற்பிறப் பில் செய்த தவத்தின் பயனோ என்னமோ அறியோம். எதைப்பெற விரும்பி நாங்கள் பரிதவித்திருந்தோமோ அதை அவர் எங்களுக்கு அகழ்ந்து எடுத்தருளியுள்ளார்.

---

## பதினன்காம் அத்தியாயம்

### தாய்நாட்டில் வரவேற்பு

இலங்கையில் எத்தகைய வரவேற்பு தமக்காகக் காத்திருந்தது என்பதைச் சுவாமிகள் சிறிதும் அறிந்திலர். 1897ம் ஆண்டு ஜனவரி மாதம் 15ம் தேதியன்று சுவாமிகளின் கப்பல் கொழும்பு துறை முகத்தினுள் நுழைந்தது. ஜனங்கள் திரள்திரளாக கண்ணுக்கெட்டிய தூரம் ஆவலுடன் அங்கே கூடியிருந்தனர். தரையின்மீது சுவாமிகளின் திருவடிகள் படிந்தபோது முழங்கின ஆனந்த கோஷங்கள் கடலின் கர்ஜனையையும் அமிழ்த்திவிட்டன. இரட்டைக் குதிரை பூட்டிய விமானமொன்றில் சுவாமிகளை ஊர்வலமாய் அழைத்துச் சென்றனர். ஆயிரக் கணக்கானபேர் வீதியின் இருபுறங்களிலும் ஆவலுடன் நின்று கொண்டிருந்தனர். வீதியில் ஆங்காங்கு அலங்காரப் பூம் பந்தல்கள் அமைக்கப் பெற்றிருந்தன. 'வருக வீரர் வருக' என்னும் ஆசிமொழி தாங்கிய பந்தல் ஒன்றும் அவைகளினிடையே நின்றது. நெடுநேரம் ஊர்வலம் போன பிறகு விடுதியை வந்தடைந்தார்கள். உயர்ந்த ஆசனமொன்றில் அண்ணலை வீற்றிருக்கச் செய்து ஊரார் அனைவரும் வரவேற்புப் பத்திரிகை யொன்று வாசித்தளித்து வணங்கி நின்றூர்கள். சுவாமிகளும் தருணத்திற்கேற்ற உபந்யாசம் ஒன்று செய்து எல்லோரையும் ஆசிர்வதித்தருளினர்.

இலங்கையில் கண்டி, யாழ்ப்பாணம் முதலிய இடங்களிலும் மக்களுக்கு தரிசனம் கொடுத்துவிட்டு சுவாமிகள்

இந்தியாவுக்கு வந்தார். பாம்பனில் அவரது நல்வரவை இராமனுதபுரம் சமஸ்தானம் பேராவலுடன் எதிர் பார்த்திருந்தது. தாய் நாட்டினுள் அவர் திருவடிகளை நாட்டியபோது இராஜா பாஸ்கர சேதுபதியும் அவரது குடிகளும் சுவாமிகளை அடிபணிந்து போற்றி நின்றனர். அவ் வேளையில் அதிர்வேட்டு ஆகாயத்தில் பீறிட்டது; மங்கள வாத்தியங்கள் முழங்கின. ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு அவர் கண்டு தரிசித்த இராமேஸ்வரத்துக்கு ராஜ ரீதியுடன் இப்போது அழைத்துச் செல்லப்பட்டார். அங்கிருந்து சுவாமிகள் மதுரைக்குச் சென்று மூன்று நாள் தங்கியிருந்தார். அவரைக் கண்டு தரிசிக்க மக்கள் அல்லும் பகலும் ஓயாது வந்துகொண்டிருந்தனர். அங்கிருந்து சென்னையை நோக்கிச் செய்த ரயில்வண்டிப் பிரயாணத்தில் அவருக்கு ஓய்வுக்கு இடமில்லாது போய்விட்டது. ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஏராளமான மக்கள் தரிசனத்துக்காக வந்து காத்துக்கொண்டிருந்தனர். திருச்சி, தஞ்சாவூர் முதலிய இடங்களில் வரவேற்புப் பத்திரங்கள் ரயில்வே ஸ்டேஷனிலேயே வாசித்தளிக்கப்பட்டன. கும்பகோணத்தில் வந்து சுவாமிகள் மூன்று நாள் தங்கியிருந்தார். அப்போது 'வேதாந்தத்தின் போதனை' என்னும் விஷயத்தைப்பற்றி அரிய உபந்நியாசம் ஒன்று புரிந்தார்.

பல வாரங்களாகச் சென்னை நகரெங்கும் சுவாமிகளின் நல்வரவைப் பற்றிய பேச்சு ஒன்றே எங்கும் நிகழ்ந்து கொண்டிருந்தது. வீடுகளிலும், வீதிகளிலும், கடைத் தெருக்களிலும், பள்ளிகளிலும் இது சம்பந்தமான

வார்த்தைகளே விசேஷமாகக் காதில் விழலாயின. அவரை வரவேற்பதற்கான ஆடம்பரமான ஏற்பாடுகள் நகரெங்கும் செய்யப் பட்டிருந்தன. சிங்காரப் பந்தல்கள் பதினேழு ஆங்காங்குச் சோடிக்கப்பட்டிருந்தன. அவைகள் ஒவ்வொன்றிலும் உயர் கருத்தடங்கிய மொழிகளும் எழுதி அமைக்கப்பட்டிருந்தன. 'வருக விவேகானந்தர் வருக' 'இறைவனது புதல்வா போற்றி' 'வாழ்க விவேகானந்தர் நீடூழி வாழ்க' 'ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நன்மகனே போற்றி' 'மாந்தரது மன்னே வருக'—இவை போன்ற மொழிகள் அப் பூம்பந்தல்களில் காணப்பட்டன.

சென்னை எழும்பூர் ஸ்டேஷனில் ரயில் வண்டி நுழைந்ததும், இடி இடித்தாற்போல மக்களது ஆரவாரம் ஒலித்தது. வாத்தியமும் முழங்கியது; பூமாரிபொழிந்தது. ஜனங்களின் சார்பாக நீதிபதி சுப்ரமணியஐயர் சுவாமிகளுக்கு மாலைசூட்டினர். சிறிது நேரத்துக்குள் ஊர்வலமும் புறப்பட்டது. குதிரைகளை அப்புறப்படுத்தி விட்டு மாணவர்கள் இரதம் போன்று அவ்வண்டியை இழுத்துச் சென்றனர். வீதிகளில் கண்ணுக்கு எட்டிய தூரம் மாந்தரது தலைகளே தென்பட்டன. வீடுதோறும் நிறை குடங்கள் வைக்கப்பட்டிருந்தன. மாடிகளின் மீது கூடிநின்றவர்கள் மலர்மாரி சொரிந்தனர். ஊர்வலமும் கடைசியாகத் திருவல்லிக்கேணியிலே கடலோர மிருக்கும் காசல் கர்னல் அல்லது அயிஸ் ஹவுஸ் என்னும் மாளிகை போய்ச் சேர்ந்தது. சுவாமிகளுக்கு அம்மாளிகையிலே தான் விடுதி ஏற்படுத்தப்பட்டிருந்தது.

சென்னையிலே சுவாமிகள் தங்கியிருந்தது ஒன்பது நாட்கள் எனினும் அதை ஒரு நவராத்திரிவிழா வென்று பக்தர்கள் பகர்ந்தனர். அல்லும் பகலும் அவரைக் காண வந்த பண்டிதர்களும் பாமரரும் எத்தனையெத்தனையோ பேர்! சென்னையில் சுவாமிகள் நிகழ்த்திய உபந்நியாசங்கள் ஐந்து. அவைகளிலே ததும்புகின்ற தேசபக்தியும், நாட்டின் நலமும், மக்களின் மேன்மையும், இன்றைக்கும் பலருக்குப் புத்துயிர் அளித்து வருகின்றன. பத்திரிகைகள் அவரது விஜயத்தை விரிவாக வருணித்து எழுதலாயின. 'ஹிந்து' பத்திரிக்கை வரைந்ததாவது: "இத்தகைய வரவேற்பு இதுபரியந்தம் சென்னையில் யாருக்குமே கிடைத்ததில்லை. நவீன இந்தியாவின் ஆசாரியராகிய ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகளுக்கு அளிக்கப்பட்டதுபோன்ற வரவேற்பும், இயல்பாக அவரிடம் மக்களுக்கு உண்டான அன்பும் மரியாதையும் வேறு எந்த அரசகுமாரனாவது, மஹாராஜாவாவது, இராஜப்பிரதிநிதியாவது இந்தியாவில் எப்பொழுதும் பெற்றது கிடையாது. அடியார் ஒருவரைப் போற்றுவது எங்ஙனம் என்பது இந்தியர்களுக்குத்தான் நன்றாகத் தெரியும்."

பின்பு ஓய்வை நாடிச் சுவாமிகள் கல்கத்தாவுக்கு கப்பலில் புறப்பட்டார். நிலத்தில் பயணம் போயிருந்தால் சிறிது நேரமாவது அவருக்கு ஓய்வு கிடைத்திராது. கப்பல் பயணம் நலிவுற்றிருந்த அவரது உடலுக்கு நலம் கொடுத்தது. திரும்பவும் பெரியதோர் வரவேற்பு வங்காளத்தில் அவருக்காகக் காத்திருந்தது. சுவாமிகளின் சீர்மையைக் கண்டறிந்த சிறப்பு சென்னை மாகாணத்துக்குரிய

தென்றல் சுவாமிகளை ஈன்றெடுத்த சிறப்பு வங்காள மாகாணத்துக்கு உரியதன்றோ! துறைமுகத்தினின்று விவேகானந்த சுவாமிகளை ஏற்றிவந்த ரயில்வண்டி நிலயத்தினுள் நுழையவே பீரங்கிகள் வெடித்தாற் போலிருந்தன ஆங்குக் கிளம்பிய பேரொலிகள். பெருமான் தங்களெதிரே தோன்றவே தலைகள் அத்தனையும் ஒரு மித்துச் சாய்ந்து வணங்கின. நறுமணமலர் சாத்தி மாலை சூட்டி அவர் திருமேனி முழுதையுமே மூடிவிட்டார்கள் எனலாம். அதியற்புதமாக அலங்கரிக்கப்பட்டிருந்த வீதி களின் வாயிலாக ஊர்வலம்வந்து முடிவுபெற நெடு நேரம் ஆய்விட்டது. ஆதலால் வரவேற்புப் பத்திரம் படித்தல் வேறு ஒரு நாளைக்கு ஒத்திவைக்கப்பட்டது.

ஏழு ஆண்டுகளுக்கு முன்பு கல்கத்தாவில் வாரநகர் மடத்தில் தமது குருசகோதரர்களையும் சிடர்களையும் விட்டுப்பிரிந்த சுவாமிகள் இப்போது திரும்பவும் அவர் களைச் சந்திக்கலானார். சர்வமதமஹாசபையில் பிரசித்தி யடையும்பரியந்தம் அவர் எங்கு இருந்தார் என்பதே அன்னவர்களுக்குத் தெரியாது போயிற்று. தங்களது அருந்தலைவரோடு திரும்பவும் கூடியிருக்கையிலே குரு சகோதரர்கள் எய்திய இன்பம் எத்தகையதென்பதை எடுத்தோத வேண்டியதில்லை. ஸ்ரீராமகிருஷ்ண பரம ஹம்சர் இவரைப்பற்றி முன்பு கூறியதெல்லாம் இப்போது பிரத்தியக்ஷமாய் நடைபெற்று வருவதைக் கண்டு அவர்கள் மகிழ்வுற்றிருந்தனர்.

சுவாமிகளைக் கண்டு தரிசிக்கவும் அவரவருக்குற்ற ஐயங்களை அகற்றிக் கொள்ளவும் தினந்தோறும் மக்கள்

அவர்பால் வந்து சூழ்ந்துகொண்டிருந்தனர். அவர்களுள் நெடுந்தூரத்துக்கு அப்பாலிருந்து வந்தவர்களும் உண்டு. நானாவிஷயங்களைப்பற்றி வெவ்வேறு பாங்குடையவர்களுடன் சுவாமிகள் சம்பாஷிக்க நேரிடும். அத்தகையவர்களுள் கோரக்ஷகசபையொன்றைச் சேர்ந்தவர் ஒருவர் ஒரு நாள் சுவாமிகளிடம் வந்தார். பசுமடங்கள் கட்டி அவைகளின் வாயிலாகக் கிழட்டுப் பசுக்களையும் கசாப்புக் கடைகளினின்று மீட்கப்பட்ட பசுக்களையும் பரிபாலிப்பது அந்தச் சங்கத்தின் நோக்கம். அதற்காகப் பணம் வசூலித்துக் கொடுக்கும்படி சுவாமிகளிடம் வந்த அங்கத்தினர் அவரை வேண்டினர். மத்திய மாகாணத்தில் அப்போது மாந்தர் ஒன்பது லக்ஷம் பேர் பஞ்சத்தால் மடிந்து போய் விட்டனர். இந்த கோரக்ஷகசபை ஆங்கு பஞ்சநிவாரண வேலை ஏதாவது செய்ததுண்டா என்று சுவாமிகள் வினவினர்.

"ஊழ்வினையினால் அவர்கள் மடிந்து போனார்கள். நாங்கள் ஏன் அவர்களுக்கு உதவி புரியவேண்டும்?" என்று மறுமொழி விடுத்தார் கோரக்ஷகசபை அங்கத்தினர்.

"ஆடுமாடுகள் வெட்டுண்டு சாவது ஊழ்வினையாலேதான் என்று ஏன் பகரலாகாது?" என்று சுவாமிகள் மீண்டும் கேட்டார்.

"அப்படியன்று; பசுவைக் 'கோமாதா' என்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. மாதாவைப் பரிபாலிப்பது நம் கடமையல்லவா?" என்றார் பணம் சேகரிக்க வந்தவர்.

"வாஸ்தவந்தான். கோமாதாவன்றி வேறு எந்த மாதாதான் உன்போன்ற புத்திசாலியைப் பெற்றெடுப்பாள்!" என்று சுவாமிகளும் வியந்து விடைவிடுத்தார். கோரக்ஷகர் திரும்பிப் போன பின்பு அவர்போன்ற கல்நெஞ்ச முடையவர்களைப் பற்றியும், மதத்தைப் பற்றிய விபரீத எண்ணங்களுடையவர்களைப் பற்றியும் சுவாமிகள் மிகவும் வருந்திப் பேசினர்.

1897ஆம் ஆண்டு மே மாதத்திலே ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் சிஷ்யர்கள் அனைவரையும் சுவாமிகள் கல்கத்தாவிலே ஒரு குறிப்பிட்ட இடத்துக்கு வரவழைத்தார். ஆங்கு அவர்களைக் கொண்டு மஹாநாடு ஒன்று கூட்டுவித்தார். ஐக்கிய வாழ்வின் அவசியத்தைப்பற்றிச் சுவாமிகள் ஆங்கு கூடியிருந்தவர்களுக்கு விளக்கிக் கூறினர். மேல்நாடுகள் மேன்மை யடைந்திருப்பதற்குக் காரணம் ஐக்கிய வாழ்வு ஒன்றே என்பதையும் அவர் தெளிவுபட விளக்கிக் காட்டினர். பின்பு ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரின் பெயரால் தாங்கள் துவக்கியிருக்கும் இயக்கமானது விரிவடைதற்கும் வலிவுறுதற்கும் சங்கம் அல்லது ஐக்கியவாழ்வு இன்றியமையாதது என்பதையும் அவர் தெளிவுபடுத்தினர். ஆங்கு கூடியிருந்த பெரியார்கள் அனைவரும் ஒருமனதாகச் சுவாமிகளது கருத்துக்கு இணங்கினர்கள். ஆக சத்சங்கமொன்று அன்று நிறுவப் பெற்றது. அது ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் என்ற பெயர் பெற்றது. பாரமார்த்திகவாழ்வும் பரோபகார சேவையும் அதன் நோக்கமாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்சரை வழிபடுகிற ஒவ்வொருவரிடத்திலும் இந்த

இரண்டு அம்சங்களும் அமைந்திருக்க வேண்டும். அதாவது தாம் கடவுளை அடைய விரும்புவதுபோன்று கடவுளது பிள்ளைகளாகிய உலகத்தவருக்குத் திருத்தொண்டு செய்யவும் பழகிவரவேண்டும். இந்த உயர்ந்த நோக்கத்துடன் சுவாமிகள் துவக்கிய சங்கமானது இன்றைக்கும் உலகெங்கும் எவ்வாறு பரவி பணியாற்றி வருகிறதென்பது நாடு அறிந்த விஷயமாகும்.

இடையறு உழைப்பால் சுவாமிகளின் உடல் நலம் சிறிது குலைந்திருந்தது; உள்ளமும் தளர்வுற்றிருந்தது. ஆதலால் அவர் மலைநாடுகளில் சிறிதுகாலம் வசித்திருப்பது உசிதமென்று மருத்துவர்கள் பகர்ந்தார்கள். சுவாமிகளும் அதற்கு இணங்கி தமது பரிவாரங்களுடன் ஹிமய மலையிலுள்ள அல்மோரா என்னும் இடம் போய்ச்சேர்ந்தார். இவ்வூரில் அப்பரமாசாரியருக்கு அளித்த வரவேற்பு உபசாரம் மற்ற இடங்களில் அவர் பெற்றவைகளுக்கு எவ்விதத்திலும் பின்வாங்கியதன்று. அல்மோராவாசிகளது விருப்பத்துக் கிணங்கி சுவாமிகள் ஆங்கிலத்திலும் ஹிந்தி பாஷையிலும் சில உபந்யாசங்கள் செய்தருளினர். ஹிந்தி பாஷையில் முன் எப்போதும் அவர் பிரசங்கம் செய்ததில்லை எனினும் அம்மொழியிலே அவர் தெளிவுபடப் பேசினர் என்று பலர் மெச்சினர்கள். பத்துவாரகாலம் அம்மலைநகரின்கண் சுவாமிகள் வசித்திருந்தார். அதற்குள்ளாக அவர் அடைந்திருந்த உடல் நலனைக் குறித்து தாமே மிகப்போற்றிக் கூறியுள்ளார். சிறு பிராயத்தில் தமக்கிருந்த துடுக்கும் திண்மையும் இப்போது திரும்பி வந்துவிட்டன என்றார்.

அநேக இடங்களிலிருந்து சுவாமிகளுக்கு அழைப்புக் கடிதங்கள் வந்து குவிந்துகொண்டிருந்தன. ஆனால் எல்லா ஊர்களுக்கும் போக அவருக்கு இயலவில்லை. காஷ்மீரம், பஞ்சாப், இராஜபுதனம் முதலிய இடங்களுக்கு மட்டும் அவர் விஜயம்செய்தார். ராஜபுதனத்தில் ஏற்கனவே தமக்குத் தொடர்வு ஏற்பட்டிருந்த ஆழ்வார், கேத்திரிபோன்ற சமஸ்தானங்களுக்கும் சுவாமிகள் சென்றுவந்தார். மக்களின் முன்னேற்றத்திற்கேதுவான உயர்ந்த பல கருத்துக்களை ஆங்காங்கு அவர் மக்களுக்கிடையில் எடுத்தோதி வந்தார்.

---

## பதினைந்தாம் அத்தியாயம்

### பலவகைப்பட்ட பணிவிடைகள்

கல்கத்தாவிலே கங்காநதிக்குக் கீழ்புறம் சுவாமிகள் அமைத்திருந்த மடம் வாரநகர் என்னுமிடத்தில் வாடகைக்கு எடுத்தவீட்டில் இருந்தது. சுவாமிகள் மேல்நாடு ஏகுதற்கு சில ஆண்டுகளுக்குமுன்பே தங்களுக்கு நிலைத்த ஸ்தலம் நதியின் மேல்கரையில்தான் அமையுமென்று அவர் குறிப்பிட்டுச் சொல்லியிருந்தார். அவ்வாறே 1898-ம் ஆண்டின் துவக்கத்தில் வாரநகருக்கு நேர் மேற்றிசையில் பேலூர் என்னும் கிராமத்தில், கல்கத்தாவுக்கு அருகாமையில் எனினும் ஜனசஞ்சாரமில்லாத ஏகாந்தமான இடத்தில் புண்ணிய நதியாகிய கங்காதீரத்திலே பதினைந்து

ஏகரா பூமியொன்றை அவர் விலைக்குவாங்கினர். அதற்குத் தேவையாயிருந்த பெருநிதியைச் சுவாமிகளின் மேல்நாட்டு சிஷ்யர்கள் செலுத்தினர்கள்.

அக்காலத்தில் கல்கத்தாவில் பிளேக் என்னும் கொடிய கொள்ளைநோய் பரவலாயிற்று. கணக்கற்றபேர் அதற்கு இரையாகி மடிந்துபோனர்கள். அக்காலத்தில் அதைக்குறித்து மக்கள் மிகவும் பயந்திருந்தனர். நோய் வாய்ப்பட்டவனை அப்படியே விட்டுவிட்டு உற்றூர் உறவினர் வேறு இடத்துக்கு ஓடிவிடுவது வழக்கம். அரசாங்கத்தாரும் அந்நோயைச் சமாளிப்பதில் கடுமையான நடவடிக்கைகள் எடுத்துவந்தார்கள். ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் பிளேக்நோயால் வருந்தி அனாதைகள் போன்று கிடக்கும் நோயாளிகளிடத்து பேரிரக்கம் காட்டினர். தமது குருசகோதரர்கள், சிஷ்யர்கள் அடங்கிய ஒரு சிறு கூட்டத்தின் உதவியைக்கொண்டு பிளேக்கு நிவாரண வேலையைத் துவக்கினர். அத்தகைய திக்கற்ற பிணியாளிகளுக்குச் சுவாமிகளும் அவரைச் சார்ந்தவர்களும் அன்புடன் செய்த பணிவிடைகளானவை அரசாங்கத்தாரையும் நாட்டுமக்களையும் வியக்கப் பண்ணின. தன்னலம் பாராட்டா அன்பு தியாகியினிடத்துத்தான் உண்டு என்பதை இவர்கள் செயலில் காட்டினர்கள்.

அமெரிக்காவினின்றும் இங்கிலாந்தினின்றும் தம்மைக் காணவந்த சிஷ்யர்கள் பலர் சுவாமிகளுடன் தங்கியிருந்தார்கள். கோடைக்கால வெப்பத்தில் அவர்கள் கல்கத்தாவில் தங்கியிருந்து கஷ்டப்படலாகாதென்று கரு

திய சுவாமிகள் அவர்களை இமயமலையில் குளிர்ச்சியான சில இடங்களுக்கு அழைத்துச்சென்றிருந்தார். அப்படிச் சென்றவர்கள் கடைசியாக பரதகண்டத்தின் பூந்தோட்டமெனத்திகழும் காஷ்மீரத்துக்கும் போயிருந்தார்கள். வருணனைக்கெட்டாத இயற்கையழகு எங்கேனுமிருக்குமாயின் அது இந்நாட்டிலேதான். ஸ்ரீநகர் என்பது இதற்குத் தலைமைப்பட்டணம். பூமகளது பெருமையனைத்தும் பொலியப்பெற்றுள்ள இவ்வூருக்கு அவர்கள் வந்துசேர்ந்தார்கள். ஆங்கு அவர்கள் அரும்பெரும் விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து மகிழ்வுற்றிருந்தனர். அவர்களுடைய இன்பத்தை வளர்ப்பதற்கேற்ற மற்றொரு நிகழ்ச்சி நேர்ந்தது. ஜூலைமாதம் நாலாம்தேதி அமெரிக்கர்களுடைய சுதந்திர தினம். தேசியவிழாவாக அவர்கள் அதைக் கொண்டாடுவது வழக்கம். அந்த ஐதிகத்துக்கேற்ப சுவாமிகள் ஜூலைமாதம் நாலாம்தேதி ஒரு சிறிய திருவிழாவும் விருந்தும் அவர்களுக்குச் செய்துவைத்தார். எதிர்பாராது வந்தமைந்த அந்நிகழ்ச்சி அவர்களுக்குப் பெருமகிழ்வூட்டியது. அதுமட்டுமல்ல, 'ஜூலை நாலாம் தேதி' என்ற தலைப்புக்கொண்ட ஆங்கிலக் காவியமொன்றை சுவாமிகள் இயற்றி வாசித்து அரங்கேற்றினர். இன்றைக்கும் அவருடைய பெருநூல்களில் அது ஒரு இடம் பெற்றுள்ளது. அப்பொழுது சுவாமிகள் பகர்ந்த ஓர் உயர்ந்த கருத்து கவனிக்கத்தக்கது. தாம் இன்னும் நான்கு ஆண்டுகள்தான் இம்மண்ணுலகில் வாழ்ந்திருப்பார் என்றும், அதற்குள் தாம் எடுத்துக்கொண்ட அறநெறிப் பணிவிடைகள் முற்றுப்பெற்று விடுமென்றும், தாம்

ஜூலைமாதம் நாலாம் தேதி தேகத்தினின்றும் விடுதலை பெற்றுவிடுவார் என்றும் பகர்ந்தருளினர். அவர் பகர்ந்த படியே அவரது அந்தியகாலம் நிகழ்வதை இறுதியில் காண்போம்.

காஷ்மீரத்தில் அமர்ந்திருந்தபோது பாலசந்நியாசி ஒருவருக்கு சுவாமிகள் சில யோகசாதனங்கள் கற்பித்துக் கொடுத்திருந்தார். அந்த பாலசந்நியாசிக்கு வேறு ஒருவர் குருவாக அமைந்திருந்தார். அந்த குருவுக்கு சுவாமிகள் மீது பொறுமை வந்துவிட்டது. ஆகையால் அவர் சுவாமிகள் மேல் 'ஏவல்கள்' ஏவினர். பிறகு தம்து சிஷ்யனை அழைத்து "அந்த வேற்ருனிடம் நீ போகாதே. அவனுக்கு யோகப்பயிற்சி போதாது. ஆதலால் அவன் இரத்தம் இரத்தமாகக் கக்கப்போகிருன். அவனை நம்பி ஞல் உனக்கும் அதே கதிதான்" என்று அச்சமூட்டினர். அவர் சொல்லியபடியே சுவாமிகளுக்குச் சொற்பநாளில் மண்டையிடி வந்துவிட்டது. இரத்தமும் கக்கலானர். சிலநாள் பெரு வேதனையடைந்த பின்பே மண்டையிடி சொஸ்தமாயிற்று. ஆனல் தெய்வாதீனமாக இவருக்கு வந்தகேடு நலமாய்முடிந்தது. "யோகி ஒருவனுக்குச் சில வேளையில் மூலாதாரத்தினின்று மேல் நோக்கிச் செல்கிற இரத்தமானது வாயின்வழியாக வெளிப்படாவிடின் அது சிரசுக்கு ஏறிச் சமாதிநிலையை வருவித்து விடும். அப் போது தேகம் தானே விழுந்துவிடுகிறது," என்று யோக சாஸ்திரம் பகர்கிறது.

காஷ்மீரத்திலிருந்து திரும்பிவருவதற்குள் சுவாமிகள் புதிதாக விலைக்குவாங்கியிருந்த பூமியின்மீது துவக்கப்

பெற்றிருந்த மடாலயக் கட்டிடவேலையும் பூர்த்தியாயிருந்தது. இதுபரியந்தம் வாடகை வீட்டிலே நிறுவியிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணமடத்துக்கு ஸ்திரமான சொந்த இடம் இப்பொழுது அமைந்துவிட்டது. ஒரு சுபதினத்தன்று சுவாமிகள் தமது குருநாதரை ஒரு திருவுருவப்படத்தின் வாயிலாக ஆங்கு எழுந்தருளப்பண்ணினர். தமது முக்கியமான கடமை இப்பொழுது ஒரு வடிவெடுத்து விட்டதென்பதைக் குறித்து சுவாமிகள் மகிழ்வுற்றிருந்தார். இந்தப் பேலூர்மடமானது இன்றைக்கும் உலகெங்குமிருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண மடங்களுக்கெல்லாம் தலைமை மடமாகத் திகழ்ந்து வருகிறது. இந்த ஸ்தாபனத்தைக் குறித்து சுவாமிகள் பகர்ந்ததாவது: "ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் தமது புனித வாழ்விலே விளக்கிக்காட்டிய சர்வமதசமரசம் எப்பொழுதும் இம்மடத்தின்கண் திகழும். மனிதனுக்குப் புத்துயிர் அளித்து அவனை மேல்நிலைக்கு கொண்டுவரவல்ல பரந்த எண்ணங்களே இங்கே புகட்டப்படும். சாந்தம், அன்பு, அமைதி, அனுதாபம் இத்தியாதி சீரிய பான்மைகளே மங்களகரமாக இங்கிருந்து உலகெங்கும் வியாபிக்கும்."

---

## பதினாறும் அத்தியாயம்

## இரண்டாவது திக்குவிஜயம்

உலகெங்கும் தமது பேரியக்கத்தை வலியுறுத்தவேண்டியது தமது கடைசியான கடமையென்று சுவாமிகள் உணர்ந்தார். அதன்பொருட்டு மீண்டுமொருமுறை அவர்

மேல்நாடுகளுக்கும் இந்தியாவில் இன்னும் சில இடங்களுக்கும் போய் வரவேண்டியது அவசியமாயிற்று. ஸ்ரீமத் துரியானந்த சுவாமிகளையும், நிவேதிதை சகோதரியையும் தம்மோடு அழைத்துக்கொண்டு 1899-ம் ஆண்டு ஜூன்மாதம் கல்கத்தாவினின்று கடல் மார்க்கமாக மேல்நாடுகளுக்குப் புறப்பட்டார். கப்பலானது சென்னை, கொழும்பு முதலிய இடங்களைச் சுற்றிக்கொண்டு, செங்கடல், மத்தியதரைக்கடல் ஆகியவைகளின் வழியாக லண்டன் போய்ச்சேர்ந்தது. சகோதரி நிவேதிதையை ஆங்குக் கொஞ்சகாலம் அமர்ந்திருக்கப்பண்ணிவிட்டு சுவாமிகள் அமெரிக்காவுக்குப் புறப்பட்டார்.

அமெரிக்காவில் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் திரும்பவும் எழுந்தருளியிருந்த செய்திகள் பத்திரிகை வாயிலாக வெளியாயின. ஆனால் அவர் இப்போது நகரத்தினுள் வசித்திருந்து பிரசங்கங்கள் செய்யவில்லை. ரிஷி ஆஸ்ரமம் போன்ற ஓர் ஏகாந்தமான இடத்தில் அமர்ந்திருந்தார். பழய சிஷ்யர்களும் நண்பர்களும் அவரது இருப்பிடம் தேடிவந்தார்கள். அப்படி வந்தவர்களுக்கு ஆத்மசாதனம் பயிலுவிப்பது அவரது முக்கிய கடமையாயிற்று. சுமார் ஆறு வாரகாலம் அமெரிக்காவின் கிழக்குப்பகுதியில் இருந்துவிட்டு சுவாமிகள் அக்கண்டத்தின் மேற்குப்பகுதிக்குப் புறப்பட்டார். மேற்குப்பகுதியில் முன்பு தாம் அமெரிக்காவுக்கு வந்திருந்தபொழுது பிரசாரம் செய்ய அவகாசம் ஏற்படவில்லை. அக்குறையை அவர் இப்பொழுது நிறைவேற்றிவைத்தார்.

சுவாமிகளின் சிஷ்யர்களுள் ஒருவர் காலிபோர்னியாவின் மலைப்பிரதேசத்தில் ஜனசஞ்சாரமில்லாததும் வனப்பு மிக வாய்க்கப்பெற்றதுமாகிய 160 ஏக்கரா விஸ்தீரணமுள்ள பூமி ஒன்றை அவர் வசம் ஒப்படைத்தார். வேதாந்திகள் யோகசாதனம் பயிலுதற்காக அங்கு 'சாந்தி ஆஸ்ரமம்' என்ற பெயர் தாங்கிய நிலையமொன்று நிறுவப்பெற்றது. சான்பிரான்ஸிஸ்கோ நகரில் வேதாந்த சிரவணம் பண்ணிவைப்பதற்கும், சாந்தி ஆஸ்ரமத்தில் சாதகர்களுக்கு யோகம் பயிலுவிப்பதற்கும் தகுந்த பரமயோகீஸ்வரராகிய துரியானந்த சுவாமிகளை ஆங்கு அமர்ந்திருக்கப்பண்ணினர், நம் அண்ணல். உத்தமர்கள் பலர் இருக்கும்பரியந்தம் அமெரிக்காவில் தமது வேதாந்த இயக்கத்துக்கு அழிவில்லையென்ற திடசித்தம் சுவாமிகளுக்குண்டாயிற்று. இப்புவியின்கண் தாம் பூத உடல் தாங்கியிருப்பது இன்னும் சொற்பகாலத்துக்கே என்பதும் அவருக்கு நன்கு தெரிந்திருந்தது. அமெரிக்காவிலிருந்த தமது சிஷ்யர்களை மனமாற ஆசிர்வதித்துவிட்டு சுவாமிகள் ஐரோப்பாவுக்குத் திரும்பினர்.

ஐரோப்பாவில் பிரான்சு தேசத்தில் பாரிஸ் என்னும் சிரிய நகரிலே அவர் சிலகாலம் தங்கியிருந்தார். மூன்று மாதத்துக்குள் பிரஞ்சு பாஷையில் பேசவும் சொற்பொழிவாற்றவும் அவர் கற்றுக்கொண்டார். பாரிஸ் நகரிலே சர்வமதங்களின் உற்பத்தியை ஆராய்தற்கென மஹாநாடு ஒன்று கூடியிருந்தது. அதில் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் கலந்துகொண்டார். ஹிந்து மதத்தைப்பற்றி அவர் கூறியதுதான் முடிவான உண்மை என்று ஆங்குக்

குழுமியிருந்த பேரறிஞர்கள் ஏற்றுக்கொண்டார்கள். பின்பு மேல்நாட்டுச் சிஷ்யர்களையும், நண்பர்களையும் சிலரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு அவர் ஆஸ்திரியா, துருக்கி, எகிப்து முதலிய நாடுகளில் பிரயாணம் செய்தார். உலகத்திலுள்ள முக்கிய நாடு நகரங்களையும், சமுதாயங்களின் பழக்க வழக்கங்களையும் இப்போது சுவாமிகள் நேரே பார்த்து நன்கு அறிந்தவர் ஆனார். உலகப்போக்கும் நடைமுறையும் சிறுபிள்ளைகளின் ஒரு முடிவற்ற விளையாட்டெனா அவருக்குத் தோன்றின. எகிப்தில் கப்பலேறி சுவாமிகள் இந்தியாவுக்கு வந்து கல்கத்தாமடம் போய்ச்சேர்ந்தார்.

தலைமை மடத்துக்கு வந்து சொற்பநாளைக்குள் சுவாமிகள் ஹிமயமலைக்குப் போகவேண்டியது அவசியமாயிற்று. அங்கு மாயாவதியில் சேவியர் தம்பதிகள் அளித்த செல்வத்தைக்கொண்டு ஸ்தாபிக்கப்பெற்றிருந்த அத்வைத ஆஸ்ரமத்தை அவர் இன்னும் பார்க்கவில்லை. ஆஸ்ரமத்தை ஆசீர்வதிக்கவும், அங்கு நடைபெற்றுவந்த அலுவல்கள் சம்பந்தமாக ஆலோசனைகள் சொல்லவும், நற்புத்தி புகட்டவும் அவர் விரைவில் அங்கு எழுந்தருள வேண்டுமென்று சிஷ்யர்கள் வேண்டி நின்றார்கள். எனவே பனிக்காலமென்பதையும் பொருட்படுத்தாது சுவாமிகள் அங்கே போய்ச்சேர்ந்தார். 1901 ம் ஆண்டு அப்போதுதான் துவங்கியிருந்தது. அசாதாரணமான பனியும் குளிரும் அவ்வருஷம் இருந்ததெனினும் ஆனந்தமாகவே அவர் அங்கு காலங்கழிப்பாராயினர். ஆஸ்ரமம் நடாத்தப்பட்ட முறையும் அவருக்குத்திருப்திகரமாகவே இருந்தது. ஆனால்

மற்ற இடங்களில் இயற்றுதற்கிருந்த பல அலுவல்களை முன்னிட்டு ஒரு திங்கள் கழியுமுன்பே மாயாவதி அத்வைத ஆஸ்ரமத்தினின்று அவர் திரும்பிவிட்டார்.

கல்கத்தாவுக்கு அருகாமையில் தலைமை மடமானது ஸ்தாபிக்கப்பட்டிருந்ததுபோன்று மற்றும் பல இடங்களிலும் கிளை ஸ்தாபனங்கள் துவக்கப்பெற்றன. அவைகளில் இரண்டொன்றை இங்குக் குறிப்பிடலாம். சென்னையில் மயிலாப்பூரில் ஸ்ரீராமகிருஷ்ணமடம் நிறுவப்பெற்றது. வங்காளத்தில் மூர்ஷிதாபாத்தில் அனுதைகளுக்கு குருகுல ஆஸ்ரமமும், கல்கத்தாவில் நிவேதிதை பெண்பாடசாலையும் ஸ்தாபிக்கப்பட்டன. இந்த ஸ்தாபனங்களைத் தவிர பத்திரிகைகளும் சில வெவ்வேறு பாஷைகளில் துவக்கப்பெற்றன. 'பிரபுத்த பாரதம்' என்னும் ஆங்கில மாதாந்திரப் பத்திரிகை மாயாவதி ஆஸ்ரமத்தினின்று பிரசுரிக்கப்பட்டது. 'உத்போதனம்'—அதாவது 'நல்லறிவு' என்ற பத்திரிகை ஒன்று வங்காள பாஷையில் கல்கத்தாவினின்று பிரசுரிக்கப்பட்டது. இவைகளின் வாயிலாக உயர்ந்த எண்ணங்களையும் நன்மை பயக்கும் கருத்துக்களையுமே வெளியிடவேண்டுமென்பது சுவாமிகளின் கொள்கை. காசிபோன்ற க்ஷேத்திரங்களில் யாத்திரைவாசிகளின் பிணியைப் போக்குதற்காக வைத்தியசாலைகளும் சிற்சில இடங்களில் நிறுவப்பெற்றன. மருந்தளித்து, உணவளித்து, உடையளித்து, கல்வியளித்து மக்களை மெய்யன்போடு பராமரிப்பது கோயிலில் புஷ்பம்சாத்திக் கடவுளை வணங்குவதிலும் ஒருவிதத்தில் மேலானது என்பது சுவாமிகளின் கருத்து. நரரை

நாராயண சொரூபமாக, ஜீவர்களை சிவ சொரூபமாக எண்ணிப் பணிவிடை செய்வது சிறந்த கடவுள் வழிபாடாகும்.

கிழ்வங்காளத்தில் டாக்கா என்னும் ஊருக்கு சுவாமிகள் விஜயம் செய்யவேண்டி ஏற்பட்டது. பல அன்பர்களின் வேண்டுகோளே அதற்குக் காரணமாயிற்று. வள்ளலாரும் அவர்களது விண்ணப்பத்துக்கிணங்கினவராய் சிஷ்யர்கள் புடைசூழ ஆங்கு எழுந்தருளினர். அதன்பின் புத்தகயாவுக்கும் காசிக்கும் அவர் தீர்த்த யாத்திரை பண்ணினது குறிப்பிடத்தக்கது. சில ஆண்டுகளுக்குமுன்பு துறவறம் பூண்டானதும் சுவாமிகள் முதன் முறை புத்தகயாவுக்குச் சென்று நிஷ்டைபுரிந்துவந்தார். இப்போது வையகத்தில் அவரது ஸ்தூல உடல்வாழ்வு முற்றுப்பெறுமுன் மற்றுமொருமுறை அவர் அங்குச் சென்று நிஷ்டைபுரிந்து பேரின்பமடைந்திருந்தார். பின்பு தமக்கு அத்தியந்த விருப்பமுள்ள க்ஷேத்திரமாகிய காசிக்கும் அவர் எழுந்தருளினர். சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்பு அவர் தேச சஞ்சாரம் செய்தபோது இப்புண்ணிய க்ஷேத்திரத்தில் சிலநாள் வாசம்செய்திருந்தார். இதை விட்டு வெளி யேகுகையிலே "உலகனைத்துக்கும் உண்மை ஞானம் புகட்டினலொழிய நான் இப்பதியினுள் திரும்பவும் பிரவேசியேன்" என்று பகர்ந்தருளிச்சென்றார். சுவாமிகளது விரதம் பூர்த்தியானவிதம் இப்பொழுது வெள்ளிடைமலைபோன்று விளங்குகின்றதன்றோ! அவருடைய திக்குவிஜயம் இத்துடன் முடிவுபெற்றுவிட்டது எனலாம்.

## பதினேழாம் அத்தியாயம்

### பரிபூரணத்தில் கலத்தல்

ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் மண்ணுலகில் பிறந்து வாழ்ந்திருந்ததில் தனிமகிமை யொன்று உண்டு. மாந்தரை உய்விப்பதற்காக அவர் பேருழைப்பு உழைத்ததிலும் மகிமையொன்று உளது. பின்பு அவரது அந்திய காலமோவெனின் அமரரும் போற்றுதற்குரிய பாங்கு உடைத்திருந்தது. சுமார் பதினைந்துமாத காலம்தான் அவர் பேலூர் மடத்தில் உடல்தாங்கி வாழ்ந்திருந்தார். அதற்குள்ளாக அவர் துவக்கிய அருள் இயக்கமானது என்றும் அழியாது நிலைத்திருப்பதற்கேற்ற ஏற்பாடுகளை யெல்லாம் அவர் செய்துவைத்தார். புத்துயிர் அளிக்கவல்ல தமது குருதேவரது பரந்த கொள்கைகள் உலகெங்கும் இனிப் பரவிக்கொண்டே போகுமென்று அவர் உணரலானார். மடாலயத்தில் அமைதியாக அமர்ந்துகொண்டு சிஷ்யர்களைச் சீர்ப்படுத்துவதிலேயே அவர் கண்ணும் கருத்துமாயிருந்தார். அவர்களின் அஞ்ஞான இருளை அகற்றுதலில் இறைவனாக மிளிர்ந்தார். அவர்களின் உடலைப் பேணுதலில் பிதாவாகத் திகழ்ந்தார். யாண்டும் ஆண்மையை வளர்ப்பதொன்றே அவரது குறிக்கோளாய் இருந்தது.

ஊனுடலை உகுப்பதற்கேற்ற ஏற்பாடுகளை சுவாமிகள் அதிவேகமாய்ச் செய்துவந்தார். தூரதேசத்தில் அறப்பணியாற்றி வந்தவர்களையும் இறுதியில் கண்டு ஆசீர்வதிக்க வேண்டுமென்று திருவுளங்கொண்டு

சுவாமிகள் அவர்களை அண்மையில் வரவழைத்தார். சந்திக்க இயலாவண்ணம் வெளிநாடுகளிலே வாழ்ந்திருந் தவர்களுக்கு வேண்டியவாறு புத்திமதிகளைப் புகட்டிக் கடிதங்கள் எழுதி அனுப்பினர். ஆக்கையை நீக்குதற் கான நன்னுள் அணுக அணுக அவரது மனம் அந்தர் முகப்பட்டு, ஆத்ம சொரூபத்திலேயே லயித்திருக்க லாயிற்று. மெஞ்ஞான சொரூபத்தில் அவர் மூழ்கியிருக் கையில் பொய்யான சரீரமானது நிழல்போன்று அவரைச் சார்ந்திருந்தது.

தேகத்தைத் துடைப்பதற்கென்று குறித்துவைத் திருந்த திருநாளும் கடைசியாக வந்து சேர்ந்தது. 1902 ம் ஆண்டு ஜூலைமாதம் நாலாம் தேதி தாம் திருமேனியி னின்று ஸ்வாதீனம் பெறத்திருவுளம் கொண்டிருப்பதாக நான்கு வருஷங்களுக்கு முன்பே அவர் கூறியிருந்தார். ஆனல் அக்கூற்றின் உட்பொருள் எல்லாருக்கும் விளங்க வில்லை. அன்றைய தினம் அதிகாலையில் அவர் திருமடத் திலே ஸ்ரீராமகிருஷ்ணரது ஆலயத்தினுட்சென்று கதவு களையெல்லாம் தாளிட்டுக்கொண்டு நான்கு மணிநேரம் நிஷ்டைபுரிந்திருந்தார். இது வழக்கத்தில் இல்லாததொரு நிகழ்ச்சி.

வழக்கத்தில் இல்லாத நிகழ்ச்சி மற்றென்று அன் றையதினம் உச்சிவேளையில் நேர்ந்தது. சுவாமிகள் தாமே அமுதுபாகம் பண்ணினர். அதைச் சிஷ்யர்களுக்குத் தமது திருக்கரம் கொண்டே பரிமாறினர். பின்பு தாமே அவர்

களுக்கு வாய் கழுவுதற்கு நீரும் வார்த்தார். சிஷ்யர்கள் செய்யவேண்டிய பணிவிடைகளை சுவாமிகள் செய்வது பொருந்தாது என்று அவர்கள் மறுத்தார்கள். "ஏன், ஏசுநாதர் அங்ஙனம் செய்யவில்லையா?" என்று சுவாமிகள் விடைவிடுத்தார். ஆனால் ஏசுகிருஸ்துவானவர் அவ்வாறு செய்தது தமது அந்தியவேளையில் என்பது அவரது நாவில் எழவில்லை. அன்று பிற்பகல் சுவாமிகள் வேதாந்த பாடமும் நடத்திவைத்தார். தங்களது இறைவனிடம் தாங்கள் பாடம் கேட்பது அதுதான் கடைசிமுறை என்று சீடர்கள் அப்போது அறிந்துகொள்ளவில்லை. அன்று மாலையில் அவர் நெடுந்தூரம் உலாவச் சென்றிருந் தார். அப்போது அவருடைய குருசகோதரராகிய ஸ்ரீமத் பிரேமானந்த சுவாமிகளும் அவருடன் சென்றிருந்தார். உலாவிக்கொண்டிருந்த பொழுது மடாலயத்தை நடாத் தும் முறையைப் பற்றியும், மாண்புடைய சமஸ்கிருதக் கல்வியை ஓங்குவிக்கும் முறையைப்பற்றியும் அவர் ஆர்வத்துடன் குருசகோதரருக்கு விளக்கி ஓதிக்கொண்டே போனார். திரும்பிவந்ததும் மடாலயத்திலிருந்த அனைவ ரையும் தமது அருகில் வரவழைத்து வைத்துக்கொண்டு அன்பு ததும்பிய இன்மொழிகளிலே அவர் உரையாடிக் கொண்டிருந்தார். அமிழ்துபோன்ற அத்திருவாய்மொழி யிலே சீடர்களுக்கு ஆயுளனைத்திலும் பயன்படும்படியான புத்திமதிகள் பல பொலிந்திருந்தன. அந்தோ! சுவாமி களின் அருள்மொழிக்கு அவர்கள் செவிமடுத்தது அது தான் கடைசிமுறையென்பதை அப்போதும் அவர்கள் அறிந்திலர்.

சந்தியாவேளை வந்தது. கோயிலில் தீப ஆராதனை துவக்கப்பட்டது. தம்மைச் சூழ்ந்திருந்த சிஷ்யர்களனைவரையும் சுவாமிகள் ஆலயத்திற்கு அனுப்பிவிட்டார். தாம் தனியாக தமது அறைக்குள்ளே நிஷ்டைபுரியச்சென்றார். தமக்குக் குற்றேவல் புரிந்துவந்த சிஷ்யரை நோக்கி, "வாயிலண்டை நிஷ்டைபுரிந்து காத்திருப்பாய்" என்று கட்டளையிட்டார். சுவாமிகளின் திருவாயினின்று மலர்ந்த மொழிகளில் இதுவே கடைசியானது. ஒரு வேளை சிஷ்யர்மூலம் மாந்தர் அனைவருக்குமே அவர் இறுதியாக இட்ட ஆக்ஞை இதுபோலும்! தமது அறைக்குள் சுவாமிகள் கிழக்கு முகமாக பிரம்ம நிஷ்டையில் அமர்ந்தார். அவரது கண்ணெதிரே கங்காநதியானது தென் திசையாகப் பாய்ந்தோடிக் கொண்டிருந்தது. காலம் கடிதில் கழியவே இருளும் வேகமாய் வந்து சூழ்ந்தது. காலமொடு தேசவர்த்தமானம் எல்லாவற்றையும் சுவாமிகள் கடந்துவிட்டார். பொறிபுலன்களும் அடங்கிவிட்டன. சுவாசப் போக்குவரவு சிறிது சிறிதாக ஒடுங்கியது. பிராணன் புருவத்தின் இடையே நிலைநாட்டப்பெற்றது. அகண்ட சச்சிதானந்தத்தில் சுவாமிகள் இரண்டறக் கலந்தார்.

---

## பதினெட்டாம் அத்தியாயம்

### சுவாமிகளின் போதனைகள்

ஸ்ரீமத் விவேகானந்தசுவாமிகள் ஆண்மையே வடிவெடுத்திருந்தார். பேராற்றலும், பேரறிவும் அவருக்கு

அணிகலங்கள் ஆயின. சீலம் பல ஒருங்கே வாய்க்கப் பெற்றவர் அவர். மதங்கள் அனைத்துக்கும் தாய்மதமாகத்திகழ்வது ஹிந்துமதம் என்பதை உலகனைத்துக்கும் புகட்டிய பரமாசாரியர் அவர். மனிதனுக்குச் சொந்தமல்லாத புறமதம் என்பது எதுவுமில்லை. மதக்கொள்கைகள் அனைத்தையும் ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்சர் தமது வாழ்வின் வாயிலாகச் சமரசப்படுத்தியுள்ளார். அத்தகைய சமரசத்தை உலகுக்கு எடுத்துவழங்கியவர் ஸ்ரீமத் விவேகானந்தசுவாமிகள். ஒவ்வொருவனும் தனக்குப் பொருந்திய சமயத்தைப் பின்பற்றவேண்டும். ஆனால் யாரும் மதவெறி என்னும் நோய்க்கு இடம்கொடுக்கலாகாது. அது அன்பை மறைத்துவிடுகிறது; வேற்றுமையையும் பொறுமையையும் வளர்க்கிறது. வேறுபடும் சமயங்களின் வாயிலாக விளங்குவது ஒரே பரம்பொருள். இதைச் சாதகன் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

மனிதன் பரிபூரணநிலை அடைதற்கு மூன்று பேரியல்புகளை வணங்கவேண்டும். அம்மூன்றினுள் நலன் என்பது ஒன்று. அச்சம் என்பது மற்றொன்று. துன்பம் என்பது மூன்றாவது இயல்பு ஆகும். பொதுப்பட நலத்தை வணங்குவது மாந்தரது இயல்பு. புகட்டாமலே அதை வணங்கும் பாங்கு அவர்களுக்கு வந்துவிடுகிறது. ஆனால் அச்சமூட்டுவதையும் துன்பப்படுத்துவதையும் வணங்குவது எப்படியென்று அவர்களுக்குத்தெரியாது. எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் பயமூட்டுகிற பொருளிடத்திருந்தும், துன்பம்விளைவிக்கிற சூழ்நிலையினின்றும்

தப்பித்துஓட முயலுகின்றானோ, அவ்வளவுக்கவ்வளவு அவைகள் அவனைத் தொடர்ந்துபற்றி வாட்டுகின்றன. எங்குச்சென்றாலும் அவைகள் அவனை விடுவதில்லை. வாழ்வில் அச்சமூட்டுபவைகளும், துன்பப்படுத்துபவை களும் இன்றியமையாதவைகளாம். மனிதன் அஞ்சா திருக்கப்பழகவேண்டும். உயிரேஅழிந்திடநேரினும் அஞ் சாதிருப்பவனே அச்சத்தை வணங்குபவன் ஆகிறான். அச்சம்விளைவிக்கும் உலகில் அஞ்சாதிருப்பவன் அச்சத்தை வென்றவன் ஆகிறான். பின்பு துன்பம் வெவ்வேறு வடிவெடுத்துத் தோன்றுவது இயல்பு. துன்பத்தை இன்புடன் ஏற்றுக்கொள்பவனே துன்பத்தை வணங்கு பவன் ஆகிறான். அச்சத்தையும் துன்பத்தையும் தெய்வ சொரூபமாகக் கருதவேண்டும். இவ்வாறு அச்சத்தையும் துன்பத்தையும் வணங்குபவர்கள் அவைகளை அறவே வென்றுவிடுகின்றனர். இகபரம் இரண்டிலும் இன்புற்று வாழ்தல் அத்தகையவர்களுக்கே சாத்தியமாகிறது.

துறவி ஒருவனுடைய பாங்கையும் சுவாமிகள் விளக்கியுள்ளார். உலகைவெறுத்து ஓடுபவன் துறவி யல்ல. வாழ்வில் தோல்வியும் ஏமாற்றமும் அடைந்திருப் பவன் துறவுக்குத் தகுதியற்றவன். சமுதாயத்தில் ஆக்க மும் சீரும் சிறப்புமுற்றிருக்கையில் இவையாவுக்கும் உயர்ந்தது பாரமார்த்திகம் என்று அறிந்து அதை ஆழ்ந்து நாடுபவனே உண்மையான துறவி. இக்கோட் பாட்டின்படி “இருமை வகைதெரிந்துஈண்டறம்பூண்டார் பெருமை பிறங்கிற்றுலகு.” என்று சுவாமிகளைப்பற்றிப் பகர்வது முற்றும் பொருந்தும்.

எல்லாமதங்களுக்கும் பொதுவாயுள்ள கோட்பாடு ஒன்று உண்டு. அதாவது சிற்றின்பத்தை ஒவ்வொருவனும் அறவே விலக்க வேண்டும். அது இன்பம்போல் துவங்கி துன்பமாக முடிந்துவிடுகிறது. அதில் நாட்டம் கொள் பவர் அறிவில்லார். ஆனால் அறிவுடையாரோ அதை விஷமென விலக்கி தற்காப்பு அல்லது பிரம்மசரியம் என்னும் பெரும் விரதத்தில் நிலைபெற்றிருக்கின்றனர். பொறிபுலன்களை அடக்குமளவு ஒருவன் மேலோன் ஆகிறான். புனிதவாழ்வு என்பது அதுவே. புனித வாழ்வு வாழ்பவனுக்கு மெய்க்காட்சி உண்டாகிறது. அனைத்தும் தெய்வசொரூபமாக அவனுக்கு விளங்குகிறது. உடலை உருக்கிவாட்டுவதால் ஆவது ஒன்றுமில்லை. மனதைப்பண்படுத்துவது ஒன்றே தவமாகும். ஆண், பெண் என்ற வேற்றுமையை மனம் கற்பிக்கிறது. பிறகு தீய எண்ணத்தை வளர்ப்பதும் அதே மனது. உடலைப் பற்றிய எண்ணத்திலிருந்து ஆண்பால், பெண்பால் என்ற எண்ணமும் உதிக்கிறது. கடவுளைப்பற்றிய எண்ணத் தில் ஊறியிருப்பது ஒன்றே இந்த வேற்றுமையை அகற்றுதற்கு உற்ற உபாயம். ஆத்மா ஆணுமல்ல, பெண் ணுமல்ல; அது தூய அறிவுமயமானது.

சுவாமிகளின் முன்னிலையில் வந்து உட்கார்ந்திருக்கும் போது யாருடைய உள்ளத்திலும் கெட்ட எண்ணம் உதிக்காது. அவரிடத்திருந்து பரவிய தூய எண்ணமே அதற்குக் காரணமாயிற்று.

ஒவ்வோர் அற்புதகாரியத்துக்கும் பிறருடைய உதவியை நாடுவது பொருந்தாது. அது ஆண்மையை

வளர்க்காது; யாண்டும் சுவாதீனமே சிறந்தது. பிழைகள் பல செய்தும் ஓவாமுயற்சியால் ஒருவன் தன்னம்பிக்கை பெறவேண்டும்.

பணிவிடை செய்பவனே நல்ல தலைவன் ஆகிறான். அதிகாரம் செலுத்துபவன் வீண் ஆணவத்தைப் பெருக்குகிறான். பிறரை அடக்கியாள விரும்புகிற ஒருவனுக்குத் தலைமை ஸ்தானம் கிட்டாது; அல்லது அதுகிட்டினாலும் அதைக் காப்பாற்றிவைக்க அவனுக்கு இயலாது. விநயத்தோடும், அன்புடனும் எல்லார்க்கும் பணிவிடைசெய்து கிடக்க விரும்புபவனே பிறரது உள்ளத்தைக்கவர வல்லவன் ஆகிறான்.

சுவாமிகள் சென்னையில் நிகழ்த்திய சொற்பொழிவொன்றிலே நாட்டின் நலன்கருதிப் பகர்ந்தருளியதாவது:– "தேசாபிமானத்தைப் பற்றிப் பலர் பிரலாபிக்கின்றனர். எனக்கும் அதில் பற்று இருப்பதோடு அதைப் பற்றிய எனது தனிக்கொள்கையும் ஒன்று உண்டு. முதலாவதாக உள்ளம் கசிந்துருகி உணரவேண்டும். உள்ளக் கசிவினின்றுதான் அருள் சுரக்கிறது. அறவே ஆகாத காரியங்களையும் ஆக்குவிப்பது அன்பு ஒன்றே. அண்டத்தினுள் அறிவதற்கு அரியதாய் இருப்புவைகளை அறிவிப்பதும் அன்பே. ஆதலால் தேசத்தின் சீர்கேட்டைச் செப்பனிட விருப்புகிறவர்களே! நாட்டின்மீது நல்லன்பு பாராட்டுபவர்களே! நைந்து உருகுங்கள்! உள்ளுணர்வு என்பது உங்கள்பால் உளதா? தேவர்கள், முனிவர்களின் சந்ததிகளான கோடானுகோடி மக்கள் விலங்குகளோடு

ஒப்பிடுதற்கான இழிநிலையிலே இன்று வீழ்ந்து கிடப்பது பற்றி உங்களது உள்ளம் பதை பதைக்கின்றதா? பெரு வளம் மிகுந்திருக்கும் நாட்டிலே பாமரர்கள் பல்லாண்டு களாகப் பசிப்பிணியால் வாடிக்கிடப்பதை உணர்ந்து உங்களது உள்ளம் உடைகின்றதா? கல்லாமை என்னும் கார்மேகம் மாந்தரது மனதைக் கவர்ந்திருப்பது கண்டு நீங்கள் கவலையுறுகின்றீர்களா? இந்நிலைகுலைவு உங்களை வருத்துகின்றதா? உறக்கமறப் பண்ணுகின்றதா? இந்த எண்ணம் உங்களது இரத்தத்திலே ஊறி, இருதயத்திலே ஊடுருவிப் பாய்ந்து உங்களது தன்மையை அறவேமாற்றி விட்டதா? இதை நினைந்து நினைந்து நீங்கள் பித்தர்கள் போல, பேயர்கள் போல ஆகிவிட்டீர்களா? தேசத்தின் துக்க நிலையைப்பற்றிய கவலையாலே பீடிக்கப்பட்டமை யால் நீங்கள் பேரையும், புகழையும் உற்றார் உறவினரை யும், உடலையும், பொருளையும், ஆவியையும் அறவே மறந்து விட்டீர்களா? இந்நிலை எய்தியுள்ளீர்களா? இதுவே தேசாபிமானம் பெறுதற்கு முதற்படியாகும்."

இவர் பேரறிவிலே சங்கரர் போன்றும், காருண்யத் திலே புத்தர் போன்றும், பக்தியிலே நாரதர் போன்றும், பிரம்ம ஞானத்திலே சுகதேவர்போன்றும், சம்வாதத்திலே பிரஹஸ்பதி போன்றும், கட்டழகிலே மன்மதன் போன் றும், வீரத்திலே அர்ஜுனன் போன்றும், வேத சாஸ்திர ஞானத்திலே வியாசர் போன்றும் அவதரித்தவராவர். எனவே இவரது தெய்வத் தன்மையில் ஒரு சிறிது எய்து தற்கு நம்மைப்போன்றவர்கள் எத்தனை ஜன்மம் எடுத்தால் இயலும் என்று இயம்பவல்லவர் எவர்! நானிலத்திலே

இவர் நாற்பது வருஷங்கூடத் திருமேனிதாங்கி வாழ்ந் திருந்தாரில்லையெனினும், இவர் கிளர்த்திய பாரமார்த் திகப் பேரியக்கமானது பாரெங்கும் பொன்ருது பரவி வருகிறது. இவர் ஈட்டிய நெறிமுறையானது வெளிப் படையாகவும் அடிப்படையாகவும் பலதுறைகளிற் புகுந்து மாந்தர்பால் புத்துயிரும் புனிதமும் வழங்கி வருகின்றது. அண்ணலது ஆண்மையை, அருட்சக்தியை, ஆத்மீகத்தை அறிந்திட வல்லவர்கள் மிகுந்திடுவார்களாக. வையகமும் துயர்துடைத்து உய்ந்திடுவதாக.

தாய்நாட்டை உய்விக்கச் சுவாமிகள் கோலியிருந்த முறைகளும் கருத்துக்களும் அவர் வரைந்த கடிதங்களின் வாயிலாகவும் நன்கு வெளியாகின்றன. அவைகளிற் சில வற்றை ஈண்டு எடுத்துரைப்போம்:— “... தூய்மையை அணிகலமாகக் கொண்டுள்ள ஆடவர்களும் மகளிர்களும் பல்லாயிரம் பேர்கள் தொண்டர்களாக வெளி வரவேண் டும். அவர்கள் தளர்வுரு ஊக்கம் வாய்க்கப் பெற் றிருப்பதோடுகூட, ஈசுவர விசுவாசத்திலே யாண்டும் பொன்ருத் துணைகோலி, சிங்கங்கள் போன்று சிறிதும் அஞ்சாநெஞ்சம் படைத்திருப்பார்களாக. எளியார்கள் மாட்டு இரக்கமும், வலியார்களால் மிதியுண்டு வறுமை வாய்ப்பட்டுக் கிடப்பவர்கள்மீது அநுதாபமும் கொண் டுள்ள அத்தொண்டர்கள் தேசமெங்கும் சென்று திருப் பணியாற்ற வேண்டும். பாமரர்களது பரிதாபமான நிலைமையைப் போக்கி, உள்வலிவும் நம்பிக்கையும் அவர் களுக்கு ஊட்டிவைத்து, சமுதாயத்தில் உயர்ந்ததும்

சமத்துவமுடையதுமான பதவியை அவர்களுக்கு ஈட்டி வைப்பதே இப்புனிதர்களது பரந்த நோக்கமாயிருக்க வேண்டும்......"

"...இத்திருத்தொண்டானது சின்னாளிலே செய்து முடிக்கப் பெறுவது அன்று; நம் கண்ணெதிரே இடுக்கண் களும் பல காணப்படுகின்றன. ஆனால் எவ்வுயிர்க்கும் ஈசனாய் இருப்பவனே நமக்கு உறுதுணையாவான். அவனது திருநாமத்தை முன்னிட்டும் அவன்மீது த்ளராத நம்பிக்கை பூண்டும் வினையாற்றத் தொடங்குவோமாக. நெடுநாளாக இந்தியாவின்மீது மலைபோன்று சுமத்தப் பட்டிருக்கும் வறுமை நோயை அது இருந்த இடமும் தெரியாவண்ணம் போக்கடிக்க வேண்டும். இது எத் தகைய அரும் பெரும் காரியமென்பதைக் கருதிப் பாருங்கள். இதைத் துவக்குகின்ற நாமே இதைப் பூர்த்தி பண்ணவிடினும் நம்மைப் பின்பற்றி வருபவர்கள் அங்ஙனம் செய்து முடிப்பார்கள். ஆதலால் உயிர் வாழ்ந்திடினும் சரி, மாண்டிடினும் சரி, பட்டினிகிடக்க நேர்ந்திடினும் சரி, கடவுளை நப்பி முழுமனதுடன் காரி யத்திலே பிரவேசிப்போமாக......"

"...நரகத்திலே இடர்ப்பட்டும் சமூக சேவை செய்வ திலேயே எனக்கு விருப்பம். ஏழை மக்கள்தான் நான் வணங்கும் கடவுள். அவர்களுக்குக் கல்வி இல்லை; முன்னேற்றம் அடைவது எப்படி என்பதே அவர்களுக் குத் தெரியாது. அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்களை யார்தான் செய்து வைப்பார்? வீடு வீடாகச் சென்று

கல்வி யறிவைப் பரப்ப முன் வாருங்கள். இடையருது ஏழை மக்களைப்பற்றியே எண்ணுங்கள்; அவர்களுக்காக உழையுங்கள்: கடவுளை வணங்குங்கள். இங்ஙனம் செய்யின் இறைவன் உங்களுக்கு வழிகாட்டி வைப்பான். ஏழைகளுக்காக வென்று யார் உள்ளம் கசிந்துருகிக் கண்ணீர் சொரிகின்ருர்களோ அவர்களே மகாத்மாக்கள். ஏனையவர்களெல்லாம் துராத்மாக்களே யாவர்.......... ஏழைகளை வருத்தி வாட்டிச் சம்பாதித்த பணத்தைக் கொண்டு கல்வி கற்றபின் அவர்களுக்குப் பிரதியுபகாரம் ஏதேனும் செய்யாத ஒவ்வொருவனையும் துரோகி யென்று தான் சொல்லவேண்டும். பாமரர்களை வதைத்து ஈட்டிய செல்வத்தைக்கொண்டு பெருமித வாழ்வு வாழ்ந்து, உடலை அலங்கரித்துப் பிலுக்கித் திரிபவர்கள் எல்லாரும் வஞ்சகம் செறிந்த பாதகர்களே யாவர்.''

தாயும், தாய்நாடும், தாய் மொழியும் ஒப்பில்லாத தீஞ்சுவையுடையன எனும் முதுமொழிக்கு இணங்க, இந்தியா சம்பந்தமான யாவும் சுவாமிகளுக்கு மாண்புடையனவாகவே விளங்கலாயின. வெளிநாடுகளுக்கு விஜயம் செய்ததற்கு முன்பும் அவருக்கு இவ்வுணர்ச்சி இருந்தது எனினும் அந்நாடுகளுடன் சீர் தூக்கிப் பார்த்த பின்பே, சீர்கேடு அடைந்திருக்கும் இந்நாளிலும், இந்நாட்டின் தனிப் பெருமை யொன்று உண்டென்பதை அவர் அறியலானுர். "நவீன இந்தியா" என்று அவர் இயற்றிய ஒரு சிறு புத்தகத்தின் இறுதியில் உரைப்பதாவது—

"பாரத மாநாட்டின் புத்திரனே! உனது தேசத்தின் பெண்மைக்கு அணிகலமாக இலங்குபவர்கள் சீதையும்

சாவித்திரியும் தமயந்தியும் என்பதை மறவாதே. நீ வணங்கும் கடவுள், முனிவர்களுக்கு முனிவராகிய தியாகராஜர், முற்றத்துறந்த சங்கரர், உமாபதி என்பதை மறவாதே. நீ மணம் புரிவதும், பொருள் தேடுவதும், உயிர் வாழ்வதும் வெறும் சிற்றின்ப போகத்துக்காகவோ அல்லது உனது தனி உரிமைக்காகவோ அல்லவென்பதை மறவாதே. அகிலாண்ட நாயகியின் அடியிணைக்கு அர்ப்பணமாக நீ பிறந்துள்ளாய் என்பதை மறவாதே. உனது லௌகிக நடைமுறையெல்லாம் ஜகன் மாதாவின் பிரதிபிம்பம் என்பதை மறவாதே. அறிவிலிகள், வறியர், கல்லாதவர், சக்கிலியர்கள், பறையர்கள் எனப்படுவோர் எல்லாரும் உனது உற்ருர், உறவினர், உடன்பிறந்தார் என்பதை மறவாதே. அஞ்சுதல் அறியா நெஞ்சம் படைத்தோய்! ஆண்மை கொள்; துணிவு கொள்; நீ ஓர் இந்தியன் என்பதைப்பற்றிப் பெருமை பாராட்டு. 'நான் ஓர் இந்தியன்; ஒவ்வோர் இந்தியனும் எனது சகோதரன்,' என்று பெருமையுடன் பகர்வாயாக. 'கல்லாத இந்தியன், தரித்திர இந்தியன், திக்கற்ற இந்தியன், பிராம்மண இந்தியன். பறைய இந்தியன், எல்லா இந்தியர்களும் எனது சகோதரர்களே', என்று சொல். அவர்கள் போன்று உடுக்கக் கந்தையொன்றே உனக்குப் போதுமானது. 'இந்தியன் எனது சகோதரன்; இந்தியனே எனது உயிர்; இந்தியாவின் தேவதைகளே நான் வணங்கும் கடவுள்; பிள்ளைப் பருவத்தில் எனக்குத் தொட்டிலாயிருப்பதும், யௌவனத்தில் இன்பம் துய்ப்பதற்கேற்ற நந்தவனமாயிருப்பதும், எனது முதுமைக்

கேற்ற சுவர்க்கமாயிருப்பதும் இந்திய சமுதாயமே. நாட்டுக்கு நலன் தருவது எதுவோ அதுதான் நான் வேண்டுவதும்,' என்று உரத்த குரலிலே முரசு அறை. 'அகிலாண்ட நாயகியே! ஆண்மை எனக்கு அளித்தருள். வலிவு பிறப்பிப்பவளே! எனது மெலிவைக் களைந்திடு; தளர்வைத் தகர்ந்திடு; உறுதியை ஓம்பி, என்னை ஆண்மக னாக ஆக்கிடு' என்று அல்லும் பகலும் வழுத்தி நீ வேண்டிடுவாயாக.''

தேசாபிமானத்தை பழக்கத்தில் கொணருதற்குத் தியாகமும் திருத்தொண்டும் தேவை யென்பதே சுவாமிகளது சித்தாந்தம். தியாகம் அல்லது துறவு என்பது உலகை வெறுத்து வனமேகுவது அன்று. சுயநலங் கருதாமையும் தேசத்துக்கென்று உயிரை ஒப்படைப்பதுந் தான் தியாகம். இது செய்கையில்வரும்போது தேசத் தொண்டாகவும் திருப்பணியாகவும் மாறவேண்டும். இந்தியாவின் மாண்பையும், விழுமிய பயிற்சியையும், வனப்பையும், ஒற்றுமையையும், உள்வலிவையும் உள்ளவாறு எவன் ஒருவன் அறிந்துகொண்டு அதற்கெனத் தனது வாழ்வைப் பயன்படுத்துகின்றனே அவன்தான் மெய்யான இந்தியன் என்பது சுவாமிகளது தேர்ந்த கொள்கை. அத்தகையவன் பூர்வீக இந்தியாவின் சரித்திரத்தை நன்கு அறிந்திருப்பதோடு அவன் நிகழ்கால எதிர்கால வளர்ச்சியிலே அவனுக்குப் பூரண நம்பிக்கை யிருக்கவேண்டும். கோடானுகோடி இந்தியர்களது இன்ப துன்பம், உயர் நோக்கம் இவை யாவையும் தன்னுடையதாக ஏற்றுக் கொண்டு நீதிவழுவா நெறிமுறையிலே அவன் தேசத்துக்

கென உழைத்துவரவேண்டும். நாடு ஒன்றே அவனறியும் கடவுளாக இருப்பதுடன், "பாரதம், பாரதம், பாரதம்" என்ற திருமந்திரம் அவனது உள்ளத்தில் ஒலித்துக் கொண்டும் இருதயத்தில் துடித்துக்கொண்டும் இருக்க வேண்டும்.

எனவே, இந்தியாவின்கண் சமீப காலத்தில் இலங்கிய தேசபக்தர்களுள் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் முதன்மைபெற்று விளங்குகின்றார் என்பது வெளிப்படை. இந்தியாவின் ஆத்மீக சக்தியையும் மேன்மையையும் நம்மவர்க்கும் வெளியுலகத்தவருக்கும் எடுத்துக் காட்டினவர் இவரே யாவர். வெளிநாட்டு நாகரிகத்தில் வெறுப்போ அல்லது அவநம்பிக்கையோ அவருக்கு ஒருபோதும் ஏற்படவில்லை. ஆனால் அதிவிரைவில் இந்தியாவானது தற்போதம்பெற்று எழுந்திருந்து, உலகு அனைத்துக்குமே அருள் விருந்து வழங்கி, விலங்குத் தன்மை படைத்திருப்பவர்களை வேதாக்களாக்கும் என்பதே அவர் ஞானனுபவத்தில் கண்டுகொண்ட திருக்காட்சியாம். ஆதலாலேதான் அன்னவர் ஆரியவர்த்தத்தின்மீது அத்தகைய அன்பு பாராட்டிப் போற்றிவந்தார்.

இக்காலத்தில் இந்தியாவுக்குத் தேவையாயிருப்பது எதுவோ அதுவே வடிவெடுத்து வந்தவர் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள். ஹிந்துக்களின் சாந்தமும், மேல்நாட்டாரது துணிவும் வீரியமும் இவர் ஒருமிக்கப்படைத்திருந்தார். அந்தணரது செந்தண்மையும் அரசரது அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய இவை யாவும் இவர்

மாட்டு யாண்டும் நீங்காது நிலைபெற்றிருந்தன. தமது நாட்டார் ஒருவரை நோக்கி அவர் நவின்றதாவது:- "சமத்துவத்திலும் சுயாதீனத்திலும் வினையாற்றுதலிலும், வல்லமையிலும் மேல்நாட்டார்களைப்போன்று ஆவதோடு, பாரமார்த்திகப் பயிற்சியில் ஒரு பூரண ஹிந்துவாகவும் நீ இருக்க முடியுமா? நாம் செய்யக் கிடப்பது இதுவே. இதைச் சாதித்தே தீரவேண்டும். இதற்கெனவேதான் நாம் பிறந்திருக்கிறோம்". எனவே, கீழ்நாட்டின் குறிக்கோளாகிய அடக்கத்தையும், மேல்நாட்டின் குறிக்கோளாகிய வினையாற்றலையும் ஒன்றோடொன்று இணங்கப்பண்ணி வைத்தவர் இவர் ஆவர்.

கீதையிலே ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ஜுனனுக்கு ஆண்மையையும் வலிமையையும் புகட்டினது போன்று, இப்பரமாசாரியரும் பௌருஷத்தையே பாரெங்கும் வழங்கி வந்தார். பொருளல்லாத குருட்டு நம்பிக்கைகளையும் கோழைத்தனத்தையும் அறவே அகற்றிவிட வேண்டுமென்பது அவரால் கடைப்பிடிக்கப்பெற்ற சித்தாந்தம். அழிவையும் புன்மையையும் வருவிப்பது அச்சமொன்றேயாம். ஆக்கத்துக்கு உறுதுணையாவது அஞ்சாமை. ஆதலால் அவர் யாண்டும் வலிவு பிறப்பிக்கின்ற பரந்த எண்ணங்களையும் புனித உணர்ச்சிகளையுமே மாந்தருக்கு எடுத்து ஊட்டிவந்தார். மனிதனது சிந்தனையானது பேராற்றல் படைத்தது; ஆதலால் ஒருவன் எதை ஆழ்ந்து எண்ணுகின்றானோ அதை எண்ணியாங்கே அவன் பெறுவது உறுதி. தன்னை ஓர் ஈனனென்றும் மெலிந்தவனென்றும் எண்ணுபவன் ஈனத்தையும் மெலிவையுமே

அடைகின்றான். தன்னை வலியவனென்றும் எல்லாம் வல்லவனென்றும் எவன் எண்ணுகின்றானோ அவன் அக்கணமே பேராற்றலையும் உயர்வையும் எய்துகின்றான். வாழ்வானது மனம்போல மாங்கல்யமாயிருக்கிறது. மக்கள்மாட்டுத் தெய்வத் தன்மை புதைந்து கிடக்கின்றது. அதை அவர்கள் உணர்ந்து அறிந்து ஓங்குமாறு செய்ய வேண்டும். இதற்காகவே தான் சுவாமிகளும் "எழுமின், விழிமின், கருதிய கருமம் கைகூடும் வரை உழைமின், உழைமின்" என்று உபதேசம் செய்தருளி வந்தார்.

---

